தனையெமகுமோடி நிலைகொண்டிடாது தளர்வொன்ற மேவுபசியு
நிரையங்கள்யாவும் வினையென்பயாவு நெடுநா ளடைந்துதுயரக்
கனைகொன்றிரங்கு கடனஞ்சமுண்டு கருநின்ற கண்டனரவா
ரனையெங்களண்ணல்பொருள்வவ்வியுண்பரந்தோவிதென்னமதியே

இம்மைக்கண்மிக்க பழியோடுநோய்க ளியையாவம் மைக்கண
மூனோ, வெம்மைக்கொடுமை னிரையத்தழுந்த விழையாமு ஞேர்
செய்பொருளபோ, லெம்மைபுரத்தி யெனமாயனும் மிமையோ ரிர
ப்பவருள்செ, யமமைகளத்த னிறைவவ்வியுண்ப ரந்தோவி தென்ன
மதியே. (சுரு)

வேறு.

கடுத்திகழ்மிடற்றோன் றிரவியங்கரவிற் கவினும்வே தாசலத்
திரவி, லெடுத்தவனபுலியா யுறன்றநாமுதலைக் கிளையுமா யேற்றவ
ளுயினை, விடுத்ததுமுணாந்தோர கனவினுமனமன் விழுநிதி கவர்வு
றுமெண்ண, மடித்திடவுளத தமைபபோவமையா ரமைகடுனுநு
மலியாய்பபிறபபா. (சுசு)

மருவியபரம வனுவளவேனு மாலயன் றேடுதற்கரிய, பொரு
விலிபொருளைக் கவாவுறுதுரோகம புதல்வரா தியனையுஞசாரும்,
வெருவுறுகட்ட மாதியகொடுநோய் விரவுமற்றெருவன்வவ் வுறு
போ, திருவிழிபொருந்தக் கண்டதுசொலலா திருமனுமபடாயினை
தொடரும. (சுஎ)

குளத்திலோாவிறியான் றருமமென்றுனாத்துக் கொடுத்திடு
பொருள்கவர்ந் துண்ண,வுளத்திலெண்ணினருாட பன்றியாயபபிறந்
தாங குழன்றுபுன்மலமருந் திடுவா, வளத்தின்மிக்காய நன்னிலஞ்
சோலை மற்றவுமாலய னுய்யக், களத்தினஞசமைத்தாற் கென்றுபி
ன்கவர்ந்தா கைக்கொள்வர்மறையவா கொலையே. (சுஅ)

புலைமகட்புணாந்தோ ராவினைவதைத்தோர் பொற்றெழியவர்
கொலை பூண்டோ, ரலைசெயுமதுவை யருந்தினோர்வருந்த வடைக்க
லப்பொருள்கவர்ந் துண்டோா, கலையுணாகுரவன் மனைவியைப்புண
ர்ந்தோர் கரிசறபபாகங்கள் பகாதார், நிலைபெறுமிபபா தகர்க்கெலா
மதிகர் நின்மலன்பொருள்கவர் கயவர். (சுகூ)

கண்ணுதற்பெருமான் றிரவியங்கவருங் கயவரைக்கண்டவ ரா
ங்கே, யெண்ணுதலின்றிக் கொன்றிடல்வேண்டு மியைதராதெனிற்
பொருட் செல்வு, பண்ணுதற்சஞ்சா ராய்க்கொலல்வேண்டும் பலித்

கிடாததுவுமற் றெனிற்ழும, விண்ணுதலறத்த ராகவல்லூரின் மேவு
தலொழிதலே வேண்டும. (எ0)

தமையறியாமற் சிவநிநிசிறிது சாந்தையோந்தன ராயி,னெ
மையிதுகெடுகக வந்ததென்றுளளத் தெண்ணியெணமடஙகுபொ
ன் னுதவி, யமையமாதோளி பாகனேயடியா ராகனேயேகனே யவி
ரகோட, டிமையவிலவாஙகு வாகனேபொறுதநி யெனறுநலலோாக
ளுய்நதிடுவாா. (எக)

பற்பலவுளைபப தெனனைமாமேருப பகரிலோரணுவெனபபற்ப
ல, சொறபடுதருமம புரிநதவரோனுஞ் சுராதிபனசிவபிரான் பொரு
ளி, லறபமேகவாநதா ரர்கிலெஞ்ஞானறு மவாமுகநோககுறிற றம
ககு, மற்படுவினைவந் தடையுமெனறஞ்சி மருளவாமாலயனமுத
லோருமம. (எஉ)

இன்னதுநிற்க மேலெடுதததுளைபபா மிண்டைமாமலருறை கலை
மான, மனனவனனைய வுதஙகமாமுனிவன வாரணுசியிறறவந திர
ணடா, லனனமாமுனிவ ரொடுமுறைநாளி லமைநதமுறபவததின
மமரனா, பொனனனிகவாநதாட புணாநதகாரணததாற பொலிவ
ழிவெய்திய தவுறகே. (எ௩)

குணமொருமூனறுஞ் சததுவமாகக கோதறுகரணமோா நான்
குங், தணவுறவொனறி நிறபவைமபொறியுந தன்பணிதலைக்கொளக்
கொனவுற, மணமலிசடையாற் றியானிததுமகிழு மாமுனிமனஞ்சி
று வினைவந, தணவலிறறெனற லெதிாசிறுசுடாபோ லசைதரத்தொ
டஙகிய தன்றே. (எச)

அனனதுதெரிநது நெஞ்சநெக்கழுங்கி யதுவாறகேதுவுந் தெ
ரிந்தே, யின்னதுசைவத் தலமெலாநனிசென றிறைஞ்சினலாலக லா
தென், றென்னதுவினைதீாத தினிதெடுததாளு மிணையிலானிணைய
டிபோது, தன்னதுமனததே யிருவினனெழுநதான றணமைசா
லுதஙகமா முனிவன். (எரு)

வேறு.

வளைமருவு மகிழ்முனிய மயிற்றளையு மாமணியும்
புளையறுசந தனககுறடும பொருகரிவெண கோடுசளும
விளைகெழுமு மாமலரு மேனமேலு மெடுததாாத்துக
கவளைசெறியத் திளையெறியுங் கஙகைகீ ரிடைபபடிந்து. (எசா)

அரிபிரமர் காணானை யாடரவப பூணானை
யெரிசெய்விட வூணானை யேத்துவாபாற் கோணானைத்
தெரிவரிய வேணானைச சிலையுரக நாணானை
விரிதருநன் மாணானை விசசுவநா தனைததொழுது. (எஎ)

ஐயனை திருககாசி யமலனை யழலேந்துங
கையனை வளியலைககக் கடந்தலையும பெருநீரபோன்
மையனோ வினையலைக்க மனமலையு மதுசிறுவி
வெய்யனேற் புரத்தியென விடைபெற் றப புறமபோந்தான். (எஅ)

ஆதார மடியாருக் காயவொரு பெருந்தகையை
மாதார நிறங்கொண்டான் வந்துதொழ வரங கொடுக்குங்
கேதார மேயானைக் கிடைததன்பிற் றுதிசெயது
பாதார விந்தமலா பணிந்தெழுநது புறமபோந்தான். (எகூ)

பருப்பதவில் லுடையானைப பருபபதமன் மகள்கொஙகைப
பருபபதமபுல் வானைமதப பருபபதமொன றுரிததானைப
பருபபதஙக டொழுஙகயிலைப பருபபதமவீற றிருபபானைப
பருபபதத்திற் கண்டுமலாப பதமபணிநது புறமபோந்தான். (அ0)

நீளத்தி கிழிதரபபாய நெடுமுகலிப புனன்மூழ்கி
வாளததி மாலையொடு மதியுமணி வானையுரற்
றுளத்தி யுரியானைச சலதரமே லுலவுதிருக்
காளத்தி மலையானைக் கைதொழுது போற்றினன் (அக)

அனைபோலு நல்லானை யடையாரிற் புலலானை
வினையாவு மிலலானை விளஙகுமறைச சொலலானைப
புனைமேரு வில்லானைப புரிசடையிற செலலானை
யெனையாள வலலானை யெழிற்காஞ்சி யிடைபபணிந்தான். (அஉ)

காராலங காட்டுபுகழ்க கநதரனைச சுந்தரனை
நாராலங் காட்டுவககு நமபனையீ தூரியற்குச
சீராலங் காட்டுநெடு நாளுமெனச செய்தமைத்த
வேராலங் காட்டுவள ருத்தமனை போய்ததொழுதான். (அங)

வெற்றிமழு விடையானை வெஞசூலப படையானைக்
கற்றைநெடுஞ் சடையானைக் கமழிதழித் தொடையானைப்
பற்றலரு ளடையானைப பாலொருசிற் றிடையானை
யொற்றிநக ருடையானை யுருகன்பிற் றொளபணிந்தான் (அச)

கொல்லையா னினிதுகைக்குங் குழகனூர் திருமயிலை
யல்லலோ குழன்மடவா ராடோவா வான்மியூர்
வில்லவீ சணிமாட வெண்பாக்கம் வேற்காடு
முல்லைவா யிலும்பணிந்தான் முழுதுணர்ந்த வுதங்கமுனி. (௮௫)

இழுக்குன்ற னிடத்தினெனை வினதிருவாய் மலர்ந்தடியேன்
வழுக்குன்ற வருள்புரிய வல்லைநீ யருளாயோ
மழுக்குன்ற மேந்துபட மணக்குன்றம் போற்றுதிருக்
கழுக்குன்ற மேயபினைக் கைக்குன்றி யெனத்தொழுதான். (௮௬)

பாங்கானைக் கொடியமைத்த பண்பானைப் பசியநறுந்
தேங்கானைத் தருமிதழிச் சடையானைத் தெரிந்தவர்பா
னீங்கானைத் தமியேற்கு நிரம்புறவைத் தருணையம
வாங்கானைத் தூங்கானை மாடத்தானைப் பணிந்தான். (௮௭)

மலையானை யுரித்தபுய மலையானை வயலருமுக
மலையானை யொருபால மலையானைக் கைத்துடிய
மலையானைக் கைதைமலர் மலையானை யெனையாள
மலையானைத் திருவண்ணா மலையானைக் கைதொழுதான். (௮௮)

தொழுமலையு நறுந்துழாயத் தூயன்முதற் சுராமுறை
வழுமலைமிசைக் குற்றுயரு மாஞ்சோலை புடையுடுத்த
பழமலையி னுறைவானைப் பற்றாயேன் வினைய
கழுமலைபங் குடையானைக் கண்டுதொழு தின்புற்றான். (௮௯)

பாவலூ ரிளம்பொழில்சூழ் பனங்காட்டூ ராமாத்தூர்
நாவலூர் திருவெண்ணெய் நல்லூர் வண்டிருவதிகை
கோவலூர் திருமாணி குழிமுதற் பலவிடத்துமமர்
காவலூர் மூன்றுமெரித் துவந்தகைத்தாற் றொழுதான். (௯௦)

பொன்றரும் பாதிரிமேற் புலியூருங் கூடபணிந்து
தென்றரு மற்றுமுள திருத்தலமெலாம் போற்றித்
துன்றருந் திடயாருந் தொழுகுலத்து மாமுனிவன்
மின்றருந் தில்லைதொழ விருப்புற்று வழிக்கொண்டான். (௯௧)

குளமெலாஞ் செங்கமலங் குழியெலா மரக்காம்ப
றளமெலாம் பொறிவண்டு சாலெலாஞ் செயிசங்கங்
களமெலாஞ் செஞ்சாலி காவெலாங் கயலாக
வளமெலாம் பொலிபணைசூழ் மாதில்லை நகரடைந்தான். (௯௨)

கருமேவு மழைமுகிலிற் கதிர்த்தவுடுக் கணஞ்சூழ
வுருமேவு பிறையுறலபோ லொண்கமலப் பாசடையிற்
குருமேவு மணிசூழப் பொறையுயிர்த்த கூன்வளைசேர்
திருமேவு புகழ்த்தெய்வச் சிவகங்கைப் புனன்மூழ்கி. (௯௩)

திருவரைப்புல னுடையாடச் செம்பவளச் சடையாட
விருமுனிவர் புடையாட விணரிதழித் தொடையாட
வொருவில்பணிக ளிடையாட வுமைமேற்கட் கடையாடப்
பொருவருமன் றிடையாடும் புண்ணியனைப் போய்த்தொழுதான். ()

காழிநகர் மேயானைக் கருதலருட் டோயானை
யேழிசைசொல் வாயானை யெஞ்ஞான்று மாயானை
யாழிநெடும் பாயானை யம்பாக்குந் தாயானை
வாழியருட் டாயானை மனமுருகிப் போற்றினான். (௯௫)

கள்ளிருக்கு மிதழியொடீர்ங் கதிரிருக்குஞ் செஞ்சடையும்
வள்ளிருக்குஞ் சூலமழு வைத்திருக்கு கைகளுமென்
னுள்ளிருக்குந் திருவடியு முற்றிருக்கு மொருமுதலைப்
புள்ளிருக்கு வேளூரிற் போய்த்தொழுதா னுதங்கமுனி. (௯௬)

பண்காட்டு மந்தீஞ்சொற் பணைகாட்டுந் தோண்மடவார்
கண்காட்டுங் கருங்குவளை கைகாட்டுஞ் செங்கமலந்
தண்காட்டுந் தடங்காட்டத் தகைகாட்டி மிகைகாட்டும்
வெண்காட்டுள் விறல்காட்டும் விமலனார் பதம்பணிந்தான். (௯௭)

காமருவு நறுமலர்கள் கான்றசுவை யுடைசெந்தேன்
றேமருவு காலோடிச் செஞ்சாலிப் பயிர்வளர்த்துப்
பூமருவு தடநிரப்பிப் புணரிபுகுந் துவரகற்றும்
பாமருவு திருக்கடவூர் பணிந்துமயா னமும்பணிந்தான். (௯௮)

நள்ளாறு தருமபுர நன்னாகைக்கா ரோணந்
தெள்ளாறு முடிவைத்தார் செங்காட்டங் குடிமருகற்
புள்ளாறு காலுழக்கு பூம்பொய்கை சூழ்புகலூ
ரொள்ளாறு புகுத்தாவிவ் வியற்றலமெ லாந்தொழுதான். (௯௯)

செந்துகிரும் வெண்முத்துந் திரைக்கரங்க ளாலெடுத்து
வந்துகட லடியுறையா வைத்துவணங் குறுமறைக்காட்
டிந்துமலி சடைக்கணிந்த வெந்தைபிரான் கழல்பணிந்து
முந்துமுனி யதுசூழ மொய்தலமெ லாம்பணிந்தான். (௧00)

வெற்பகனின் றெழுகதிர்நேர் விளக்கஞ்சா லூதங்கமுனி
யற்பகமோங் குறக்கவரி யலரிலஞ்சி பாயவேரீஇக்
கற்பகத்தின் கழுத்தொடியக் கருவாளை பாய்மருதப்
பொற்பகநீங் காதுடுத்துப் பொலிதிருவா ரூரடைந்தான். (கoக)

அடுபுலித்தோ லுடையானை யனைத்துலகு முடையானை
வடுவில்களங் கரியானை மாலயனுக கரியானைப்
படுபுனன்மா சடையானைப் பவமெனுமா சடையானை
நெடுமணிப்புற் றுறைவானை நிறைவானைப் பூசித்தான். (கoஉ)

காரூரு மணிமாடங் கண்வழுக்கக் கதிர்வீசு
மாரூரி னின்றும்போந் தலர்த்தடஞ்சூழ் வாஞ்சியநன்
னீரூரும் பெரும்பண்ணை நிலவமுபர் மாகாள
மேரூருந் திருவீழி மிழலையும்போ யிறைஞ்சினான். (கoரு)

அடலானை யுரித்தபிரா னமருமரும் பதியிறைஞ்சி
மடலாரும் பூஞ்சோலை மயிலாடு துறைவணங்கி
விடலாகாப் பிறதலமு மெய்யன்பிற் போய்ப்பணியா
வுடலாமுப் பகைவென்றோ னெண்டுறைசைப் பதியடைந்தான்.

ஆவடுதண் டுறையமரு மரும்பெறன்மா ணியைவகிர்
மாவடுநேர் விழியுமையாள் வாமத்தானைத் தொழுது
கோவடுவே லேந்துவர குணவழுதி போற்றியமா
லேவடுபொற் சிலையாளி யிடைமருதும் போய்த்தொழுதான். ()

வேறு.

மடந்தைபாகனை மால்விடைப்பாகனைக்
குடந்தையானைக் குடந்தம்பட்டேத்திநீர்த்
தடந்தைதாமரைத் தண்மலர்சாய்வழி
நடந்தையாறு தொழுதனனற்றவன். (கoசு)

கூடுமன்பினிற் கும்பிடுவாரொலா
நாடேஞ்ச நகத்தினைச்சூழ்வுற
நீடுபற்ப றலங்களு நேசியாத்
தேடுமாமுனி சென்றுசென் றேத்தினான். (கoஎ)

வானைக்காவல்செய் வானயன்மான்முனோ
ரூனைக்காவல்செ யாவுணர்வோங்கவுட்
டேனைக்காவல்செய் வண்டிற்செறித்திடு
மானைக்காவி லடைந்தனனந்தணன். (கoஅ)

சாரம்பூண்ட கனியைத்தவாதபே
ரீரம்பூண்டவ ருள்ளுறை யின்பத்தை
வீரம்பூண்ட பரசுடைமேருவை
யாரம்பூண்ட வமுதினையேத்தினான். (௧0௯)

யாவுராயினு மூழ்கினிருவினை
யோவநீக்கு மொளிர்புனற்காவிரி
நாவலான்புகுந் தாடிநலங்கிளர்
தேவதேவன் சிராப்பளி சேர்ந்தனன். (௧௧0)

திரிசிராமலை மேவியசெம்மலை
பரிசிராமன் பணிந்தெழும்வள்ளலை
விரிசிராவண முங்கரைமென்றுதி
துரிசிராவண நோன்றுறச்செய்தனன் (௧௧௧)

துதிசெய்தன்பிற வொருமுதவணீங்கியே
மதிசெய்மாமுனி வாளைக்குமுகிலமேற
குதிசெய்பண்ணைக குடதிசைநோக்கிநா
ளிதிசெய்பேருறை யூரைநினைந்தரோ. (௧௧௨)

ஆன்றபேருறை யூரடைவாமெனச
சான்றமாமுனி தாழையுமவாழையு
மீன்றசெங்நெலுங் கன்னலுமீண்டியேர்
தோன்றமேவிச சுடர்வழிகூடினான். (௧௧௩)

ஆறடைந்த வருந்தவ மாமுனி
யூறடைந்த சிறுவினையூசகத்தான்
மாறடைந்த மனததினலைவிறகோ
ரீறடைநதில தினனுமென் றெண்ணுவான். (௧௧௪)

அனையினேறொன வுள்ளமலைதரத்
துணையியாலவருநு சூழ்வினைதாங்கினேன்
பிணையனொருபாகபெருந்தகை
யிணையிலானரு ளன்றுபெற் றுயகுவேன். (௧௧௫)

முந்தைநாளவினை முற்றுமற்றுத்தெளி
சிந்தைவாய்த்துந நிகழ்பொலி வெயதிடப்
பந்தைநேர்முலை யாளொருபாலுடை
யெந்தையாரரு ளன்றுகிடைபபதே. (௧௧௬)

என்றுளம்படர்ந் தேகுமுனிவனுக்
கன்றுதோறும் விழியுமானரு
டுன்றுமாறுவலத்துத் துடித்தன
நன்றுநன்றிவை யென்றுளநாட்டினன். (ககள)

மழையைநேர்களத் தண்ணல்வயங்கருள்
பிழையினேன்பெறு தற்கிடமீதென்றே
விழையுநெஞ்சின் விரைந்துநடந்தறந்
தழையுமாவுறை யூரெல்லைசார்ந்தனன். (ககஅ)

எல்லைசாரவு மென்னுளைக் கேன்முனி
தொல்லைமாவினை யாவுந்தொலைந்தன
வொல்லையின்மன மோர்வழிப்பட்டதங்
கல்லைநேர்களத் தண்ணலருளினல். (ககக)

தஙகுவாய்மை யுதங்கமுனிமன
மெங்குமேகலற் றேவியதீபமேய்ந்
தங்குநினறமை யாய்ந்துமகிழ்வுறீஇப்
பொங்குமிக்க பொலிவடைந்தானரோ. (க௨0)

ஆடினன்மகிழ்ந் தஞ்சலிசென்னிமேற்
சூடினன்சொல் லரும்புளகத்தின்மெய்
மூடினன்முடி வற்றசிவானந்தங்
கூடினனெனக் கோதின்முனிவனே. (க௨க)

இத்தலத்துக் கிணையுயர்வாந்தல
முத்தலத்துமில் லென்றுமுன்னிக்குவி
கைததலததின னுயென்றுங்கண்ணுத
லத்தலத்துறை தற்குளவாவினன். (க௨௨)

நண்ணுவாாதலம்வேறுள் ளனநசைஇ
யண்ணுவார்நினை வற்றனனேயறக
கண்ணுவார்குணங் கண்டமருந்தைவிட்
டெண்ணுவார்கொன்மற் றென்றுகையேற்றுண. (க௨௩)

குன்றுங்காணுங் குலநதித்தீரமுஞ்
சென்றுமாமுயல் செய்வர்மனம்பொறி
யொன்றுமுமலிவ் வொண்டலங்கண்டில
ரின்றியான்பெற்ற தியார்பெறுவாரொன்றுன். (க௨௪)

வேறு.

கறங்குபோற்பொறி வாய்ப்புகுந்துழன்மனங் கலைதெரியு தங்கற்குப், பிறங்குகூவிள வனமெனுஞ்சிறுறை பேருறையூரொல்லை, யறங்குலாவவந் தடைதலுமசைவற நின்றதாலஃதோரி, னிறங்குலாவுநூன் மார்பினீரத்தல நிகாவதெத்தல மண்மேல்.

உதங்கமுனி பொலிவடைந்தபடல முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௫௧௫.

## பஞ்சவர்ணப்படலம்.

அடியவர்க்கெய்ப்பில்வைப்பே யாகிய கருணைமூர்த்தி
படிமுதலுலகுமூன்றும் பகர்வில்வா ரணியநாத
னொடிவறுகேள்விசான்ற வுதங்கமா முனிவன்காணக்
கடிதலில்பஞ்சவர்னங் காட்டிய வாறுசொல்வாம். (௧)

மறுவறுகல்விசான்ற மாமுனி யுதங்கனென்பான்
றெறுசிறுவினையினீங்கிச் செம்மைசால் பொலிவடைந்தான்
கறுவினங்காந்துபற்றுங் காரரா வாயினீங்கி
யுறுசுடர்பரப்பித்தோன்று மொண்கலை மதியமொத்தான். (௨)

பொறிவழிவிரையவோடிப் புகுமனமலைக்க நொந்து
தறிநிகராகிநிற்கத் தலைப்படு மகிழ்சசிபூத்தோன்
குறிகடந்தோடியோடிக் கொடும்பரி யலைக்கநொந்து
நெறியினின்றிடமகிழ்சசி நிரம்பிய பாகனொத்தான். (௩)

கூவிளவனத்திற்காந்தி மதியொடு குடியிருக்குங்
காவியங்கண்டத்தெண்டோட் கண்ணுதற் சாமிதன்னை
மேவியான்பணிவலென்று விழைந்துசென் முனிவனுங்காங்
காவிசான்மருதவைப்பி னணிவளநோக்கிச செல்வான். (௪)

மருவுமுட்டுறவுபூணூர் துறந்தவர் போல்வஞ்சித்துக்
கருதுவம்பலர்கைச்செம்பொன் கவர்ந்துவாழ் வன்கணார்போற்
பொருவமெய்த்துயில்கொள்ளாது பொயத்துயில கொண்டுநீரின்
வருகயலலகானள்ளி வயிற்றடை குரண்டங்கண்டான். (௫)

நசையுறுமைந்தர்ப்பற்றி நன்பொருண் முழுதும்வவ்விப்
பசையிலையென்னநீத்தல் செய்யும்பைந் தொடியார்போல
வசையறுகரும்பைப்பற்றி மருவுசா றடங்கவாங்கி
யிசையில்கோதென்றுநீக்கு மெந்திரம் பலவுங்கண்டான். (௬)

ஓருடனின்றுந்தாமற் றோருடல் பாயத்தக்க
சீருடைச்சித்திபெற்ற செல்வர்போ லொருசெஞ்சாலி
நீருடையயலினின்று நெடியமற் றொருசெய்பாயும்
வாருடற்றகட்டகட்டு வாளைமீன் பலவுங்கண்டான். (எ)

விரவுகேவலத்தினின்றும் விமலனா ரருளினாலே
யுரவுசேர்சகலம்பெற்று விளங்குமான் மாக்களொத்துப்
பரவுவெண்முட்டைநின்றும் பரிந்துதா யணைத்தலாலே
புரவுகொள்பணையுற்றன்னப் பார்ப்புகள் பொலிவகண்டான். ()

உற்றொருதடத்தின்மூழ்கி யுமாபதி கருணையுந்தப்
பெற்றொருதடத்திறமேன்றிப் பிறங்கிய வபபரோபோற்
சுற்றொருதடத்தின்மூழ்கிச் சுருங்கைநீ ருந்தப்பெற்று
மற்றொருதடத்திறமேன்றி மகிழுமோ திமங்கள்கண்டான். (கூ)

மாங்குயிற்கிளவிபாகன் வண்புகழ் விரித்தழுவர்
தேங்குசீர்வாதவூரர் செய்யுளின் சுவையேபோல
வோங்குமுப்பழத்தின்சாறு முடைபடு கரும்பின்சாறு
மாங்குபல்லிடங்கடோறு மளவறப பெருகல்கண்டான். (க0)

சாலியிற்கரும்பிற்காலிற் றலைவிரி யரம்பைககாவில்
வேலியிற்சங்கமூரு மென்பணை யுடுத்தகூடற்
சூலியிற்கதிபெற்றுள்ள நாரைதன் சுற்றமாய
பீலியிற்பிளிறுநாரை பெடையொடு திரிவகண்டான். (கக)

வரமிகுநாளைப்போவார் மங்கையா ளுயாபாணர்
பரமனைப்பாடுவார்கள் பரிந்திசை பாடலபோல
விரவுபல்பொறிவண்டெல்லா மெல்லிசை விழைந்துபாட
விரதவின்மதுப்பூமலரு மெண்ணினந் தனங்கள்கண்டான். (கஉ)

எழிபுனற்கழனிசெஞ்செசா லிளங்கதி ரீட்டியாக
முறிவிலோ ரிலைமேனிற்க முடஙகரி தோட்டியாகச்
செறிசுவைக்கழைதண்டாகச சினக்கலிப படைவராது
மறிதரப்படைபல்கொண்ட வண்ணம்போற் பொலிதல்கண்டான்.

ஏமநன்னெறியேசேரற் கெண்ணியங் நெறியிற்செல்வோன்
றோமகல்கழனிவாழைச் சுருள்விசி யாககுருத்து
வாமமார்மதியைத்தீண்டி மலர்க்கணை யைந்துந்தாங்குங்
காமவேள்கவிகைதாங்குங் காம்பெனப் பொலிதல்கண்டான். ()

இருபுறநிரையாயுள்ள விலாங்கலி கால்களாக
வருகுபைங்கன்னல்கந்தி யரம்பைகாற் கணிந்தவாகக்
கருமுகின்மேற்பரப்பாக் காவணப் பொலிவிற்றோன்று
மருதநல்வழிச்செல்வோன்பல் வளமெலாங் கண்டுபோனான். ()

அத்தகுமுனிவர்கோமான் சிவத்தினை யடையவான்ம
தத்துவமுதலாமூன்று தத்துவங் கடந்துசேற
லொத்தணிமருவிநின்ற புறமிடை யுள்ளென்றோது
முத்தமநகரமூன்றுங் கடந்தன னுவகையோங்க. (௧௫)

மேருமால்வரையையொத்து விளங்குகோபுர முஞ்சூழச்
சாருமாமதிலுங்கண்டான் றம்பிரான்றளியிதென்றே
யோருமுள்ளகத்துக்கொண்டா னுரைக்கரு முவகைபொங்க
வாருமன்பினனாய்த்தண்டி னவனிமேற் பணிந்தெழுந்தான். ()

கண்ணிணைநோக்கமுந்துங் கையிணை கூப்பமுந்தும்
புண்ணியம்பயப்பமென்று ளிணைவலம் போதமுந்து
நண்ணிநாத்துதிப்பமுந்து நன்மன மெண்ணமுந்தும்
பண்ணியதவர்க்கொன்றேனும் பயன்படா வுறுப்புண்டாங்கொல்

பரவுமைம்புலன்களென்னும் பனைக்கைமால் யானைவென்ற
வுரவுயர்முனிவர்சிங்க முடல்களி றுரித்துவென்ற
புரவுடையமரர்சிங்கந் தனைக்கண்டு போற்றப்புக்க
தரவுகீழ்மேலுந்தாங்க வாழ்ந்துயர் சிகரிவாய்தல். (௧௯)

தடாவலிப்பஞ்சபாசத் தடைகடந் தேகுவாரின்
விடாதருட்குரிமைபூண்ட மெய்த்தவ ரேறுபோல்வான்
வடாதுவெற்பெனச்சொல்பஞ்சா வரணமுங் கடந்துள்புக்கான்
கெடாதெழுமுவகையோடு கிளப்பருமன்பும் பொங்க. (௨0)

வருந்துமோர்வறிஞன்செம்பொன் வைப்பெதிர்கண்டாற் போலக், கருந்துழாய்க்கண்ணியானுங் கமலமேனண்ணியானும் வருந்தியுங்காணுத்தேவை மாமறைவில்வமூலத், திருந்தருள் கோவையம்மா விருகணுங்களிப்பக்கண்டான். (௨௧)

நறுமலர்வில்வமூல முளைத்தநற்கரும்பைநாடிப்
பெறுபவர்க்கினிக்குந்தேனைப் பேசுவார்பெயராப்பாசந்
தெறுமருள்வடிவமாஞ்சித் திரவிலிங்கத்தைக்கண்ட
வுறுவரற்கப்போதுற்ற வுவகையாருரைக்கவல்லார். (௨௨)

நெற்றிமண்டோயத்தாழ்ந்தான் ஞேரோலெனவெழுந்தானன்று
பற்றியபந்தஞ்சிந்தும் படிபெற்றேனென்றுதுள்ளி
வெற்றியவிமிலேறூரும் விமலன்முன்குடந்தம்பட்டு
முற்றியவன்புபொங்க நின்றிவைமுன்னனுற்றான். (உங)

மாலயனுணராவள்ளல் வைகியவில்வமூல
ஞாலமுன்கயிலையென்கோ நான்மறையந்தமென்கோ
சீலமாரன்புமிக்கார் சிந்தையேயென்கோவோர்கல்
லாலமர்தருவென்கோமற் றியாவுமென்கோவென்சொல்கோ. ()

சித்திரகாயத்தின்றே லுடைத்திருவனையும்வெய்ய
சித்திரபானுவாழ்க்கை சேர்நுதற்கண்ணுநண்ணு
சித்திரமனையாள்சேர்ந்த பாகமுமுடையவிந்தச
சித்திரலிங்கமூர்த்தி சித்திரம்யாவர்சொல்வார். (உரு)

இவர்வடிவெட்டுளொன்று மதிசடையிருப்புளொன்று
மிவர்விழிமூன்றிலொன்று மதியுலகேத்தாநிற்கு
மிவரிடப்பாலுங்காந்தி மதியெனிலெந்தஞான்று
மிவர்திருவடிக்கேசேர்க வென்னுடைமதியுமாதோ. (உசா)

பன்னருமண்டரண்ட பகிரண்டத்துயிர்களெல்லாந்
தன்னடிவைகவைக்குந் தம்பிரான்குடைந்துதேனுண்
டின்னிசையளிகள்பாட விணர்விரிதருமாலூர
மன்னடிவைகுமென்னில் வானினுஞ்சிறந்ததிம்மண். (உஎ)

விதிக்குநாயகனெழுங்கு விதிக்குநாயகன்பொன்மாது
பதிக்குநாயகன்பேரன்பு பதிக்குநாயகனின்பாய
கதிக்குநாயகனென்னுள்ளுங் கதிக்குநாயகனெல்லோரு
மதிக்குநாயகனிக்காந்தி மதிக்குநாயகனேயாமால். (உஅ)

மெய்யெனும்பொய்யைவேண்டார் வெறுக்கைமேல்வெறுக்கைபூணார், செய்யவள்புணர்மான்முன்னோர் திருவின்மால்சற்றுங்கொள்ளார், மையறவொன்றியொன்று நிலையின்பமருவிவாழ்வா, ரையவிவ்விலிங்கமூர்த்தி யாலயங்கண்டபேரும். (உகூ)

என்றுளத்தின்னமுன்னி யீறிலாவன்புபொங்க
நின்றுளமுருகுநல்ல நெறியுடையநிருன்கேட்பக்
குன்றுவில்லாகவாங்கிக் கொடிமதின்மூன்றுஞ்செற்ற
மன்றுளார்ளகரேகாய வாணியாயின்னகூறும். (ஙா0)

வேறு.

முறைற்றெரியுதங்கமா முனிவகேண்மதி
மறையுயர்வொப்பற வயங்குமவெண்டிரை
யறைகடலுடுத்தபா ரகம்விளங்கவிக
குறைவறுதலமெனக் கூறுநாளுமே. (௬௧)

திகழ்தருமுமையவ டிருமுன்வெம்பவ
மகழ்சிவதீர்த்தமொன் றைதுநாவலா
புகழ்வளத்ததுமிகு புண்ணியத்ததோ
ரிகழ்வறவிளங்குவ தெந்தஞான்றுமே. (௬௨)

பார்த்திவர்முதலிய பாருளோர்களும்
பூர்த்தியற்பயன்முதற் புலவருந்தொழு
சீர்த்தியின்மிக்கசித் திரவிலிங்கநன்
மூர்த்திதன்மான்மிய மொழியவல்லர்யார். (௬௩)

தலமுதலாவுரை தந்தமூன்றொடு
பலபொறிவண்டினம் பருகிப்பாண்செய
வலர்மதுமடைதிறந் தளிகரும்விலவுமு
நிலவுறல்விசேடமென் றுரைக்குநீண்மறை. (௬௪)

ஆதலினித்தகு தலத்தையையநீ
காதலினடைந்தது கருதுன்புண்ணிய
மாதலமிதிலொரு மடஞ்சமைத்துநா
லோதல்கொணீயுறை யொருவவெண்ணுமேல். (௬௫)

குலவுதென்பாற்கங்கா கூபநீர்முகந்
திலகுசித்திரவிலிங் கத்திற்காட்டுதி
மலர்முதலியகொடு காலந்தோறுமா
ணிலவுறப்பூசிக்கைக் கோடிநீள்கதி. (௬௬)

என்றசொலிருசெவி யேறசிந்தையு
ளொன்றியபெருமகிழ் வுடையனாயபணிந்
தன்றுகாலையிற்புன லாடியையனை
நன்றுபூசனைசெயுங் கருத்துணட்டினன். (௬௭)

புறம்பொலிதிருமுனி பொற்பிற்கூடினு
னறம்பொலிதருசிவ தீர்த்தமாடினு
னிறம்பொலிநீற்றுமெய் திகழமூடினு
னிறம்பொலிநறுமல ராதிநேடினன். (௬௮)

மறைமுனிவள்ளல்பால் வருமக்காலையி
லறைபுகழ்சசித்திர விலிங்கமாகிமுன்
னிறையெழிலருளுரு நீத்துநீப்பரு
மிறையவனரதந விலிங்கமாயினன். (ங௬)

அரதநவிலிங்கமா யருளின்வைகிய
வரதனைசசேய்மையே கண்டமாமுனி
யிரதநீராடியாம வருமுனிங்குவந்
தரனையர்ச்சித்தவர் யானொனறுள்ளுவான். (ச0)

அளகையான்பூசனை யாற்றிச்சாத்திய
வளமலிசெய்யபட் டொளிகொல்வாசவன்
பளகறுசாந்திய பாவுசெம்மணிக
கிளரொளியாங்கொலிக் கேடிலசேயொளி. (சக)

அண்டர்செங்கமலங்கொண் டருச்சித்தார்கொலோ
துண்டவெண்பிறைநுதற் றொண்டைசசெய்யவாய்க்
கொண்டலங்குழலர மாதர்குங்கும
மெண்டகவப்பின ரோகினர்கொலோ. (சஉ)

பாதலத்துறையராப் பலவுமிங்ஙனுற
ருதரவொடுமணி யனைத்துங்கான்றுகைப
போதகமுரித்தவர் மேனிபோர்த்தவோ
மாதர்கொளினையகண் வழுக்குஞ்சேயொளி. (சங)

இன்னதென்றுணர்கிலே னெம்பிராடடிபு
மன்னருட்காந்திசேர் மதியிவ்வையனு
முன்னருமழவிளங் கதிரகொலோவெனத்
தன்னுளேநினைந்துவந் தருகுசார்ந்தனன். (சச)

உற்றுநோக்கினன்பிறி தொன்றுங்கண்டிலன்
மற்றதுதிருவருள் வள்ளலாடலென்
றற்றமின்முனிவர னதிசயித்தனன்
பற்றுபூசனைவிதிப் படிதொடங்கினன். (சரு)

முற்படுகிரியையே முதலவாகிய
பறபலகிரியையும் பாங்கிற்செய்தனன்
சொற்படுபெரும்புகழ்க துவாரபாலகர்
பொற்புறுபூசையும் புரிந்துள்புக்கனன். (சசா)

நிருத்தன்மாதேவனின் மலனிரஞ்சனன்
றிருத்தன்மாபூசனை செய்துமுற்றிட
வருத்தன்மாவூறுறு வகைசெய்மங்கல
வொருத்தன்மாமலரடி யுன்னிப்பூசித்தான். (சஎ)

முன்னுமாவாகன முதலெலாஞ்செய்து
பன்னுதன்கமண்டல நிறையப்பஞ்சகவ
கொன்னுமின்சுவைகசங்கா கூடநீர்முகந்
துன்னுமாமறைமுத லொருவற்காட்டினன். (சஅ)

கந்தமக்கதைநறுங் கவின்செயாகவிரா
வந்தளிர்முதற்பல வலருநகைநொடு
மந்திரவிதிப்படி மகிழ்ந்துசாத்தினு
னிந்தியமவித்தவே னொழிலனொன்மாமுனி. (சகூ)

துதிநிகமப்படி தூபதீபமு
மதியுறக்கோட்டினன் வல்லமையாமைநிற
கதிமிகுபலந்தையுங் கனிவிளமனிறு
னுதிசிவபத்தியே யுருவமாயினான். (ரு0)

அரதநவணையிடை யமாதற்சேர்ப்பவோ
வரதநமெனப்பல ரறைதல்காட்டவோ
வரதநப்பூனுமை யாங்களிகவோ
வரதநவிலிங்கமா யடிகளாவைதல். (ருக)

எனப்பலதுதிகளு மியம்பியப்புதன்
முனர்த்தனியிருந்தருண் மூலமந்திர
மனத்துறச்செபித்தனன் மதியின்மேலவ
ருனற்கிடமாகிய வுதங்கமாமுனி. (ருஉ)

அருளுறுகாந்திசேர் மதியையன்பினுற்
பொருளுறுமறைப்படி புரிந்துபூசித்தான்
றெருளுறுதண்டிபூ சனையுஞ்செய்தனன்
மருளுறுநெறியுறு வரதமாமுனி. (ருங)

விடைமதிமதிவிளங் குவாவின்மேலவர்
குடையுமந்தாகினி கூபநீர்முகந்
துடையவற்காட்டின னுன்னும்யாவையு
மடைவரநாளாகு ரமலற்காட்டுவோர், (ருச)

மலர்மிசைவதிபவ னனையமாமுனி
யலர்குணமதிறபுறத் தருகிலோர்மடஞ்
சிலாபுரிந்துதவிடச சிறபபிற்சென்றவண்
பலாதொழவிருந்தனன் பரனையுளளியே. (ருரு)

உசசிமேற்புனலுடை யொருவன்றளினை
யுசசிமேறறியானஞ்செ யுறுவர்யாவரு
முசசிமேற்கொளபபொலி யுதஙகமாமுனி
யுசசிமேற்றிரிகதிா செய்ததோாநதனன. (ருசா)

நடுப்பகலாயிற்றென் றெழுந்துநன்முனி
தடுப்பரும்புகழ்சசிவ தடமடைந்தனன்
விடுபபறுநிதிய விரதமுற்றினன்
கடுபபயில்கண்டன்முன் கனிவினெய்துவான். (ருஎ)

வரமுனிதன்புடை வருமககாலையி
லரதநவிரிஙகமா யமாநதவையனும்
பரவுசெஞ்சடைததிரி பதகைவெண்புன
றரமிகுமுடலெலாந தழுவிற்றுமென. (ருஅ)

கற்பநீறணிந்தொரு சவின்கொண்டாலெனப
பொற்பமர்துரோணமென புதியவெண்மலர்
மற்படுமேனியை மறைததததாமென
விறபடுபிறையமு தொழுககிவிடடென. (ருகூ)

முடியறியாவன முயன்றுதான்புரி
படியறுதவததிறை பரவருடபேறீஇக
கடிதுகண்டிருசிற கனைவிரிததினி
தடிமுதன்முடிவனா யவாயததழீஇயென. (சா0)

போகிரூற்றமரர்கள் பூவின்மேலவ
ஞகி வனத்தொடை நாதனமாதவர்
யோகியர்பணிந்துள முருகவெண்ணெய்யே
யாகியோர்தலத்திடை யமாந்தவாறென. (சாக)

அமரரான்பயம்பொழிந் தாட்டினுலென
வமரர்வான்சுதையெடுத தப்பினுலென
வமரசெய்சோற்றபி டேகமாமென
வமரும்வெண்பட்டலங் காரமாமென. (சாஉ)

வேறு.

அடியர்நினைந்த யாவும்வழங்கு மருளாலே
நெடிதுவிளைந்த மாபுகழ்பொங்கி நெறியேதன்
வடிவமொருங்கு மூடியதென்ன வளமார்வெண்
படிகவிலிங்க மாயினனெங்கள் பரமேசன். (சுங)

அன்னதுகண்டா னுடலுவந்தா னருளுன்னி
முன்னர்வணங்கி யெழுந்துவகைக்கடன் முழ்குற்றே
துன்னியமாமல ராதியகொண்டு தொடங்குற்றுன்
மன்னியபூசனை செய்தனனன்பின் வழாவாறே. (சுச)

வெள்ளியமால்வரை வெள்ளியமால்விடை வெண்டும்பை
வெள்ளியவான்மதி வெள்ளியவான்புனல் வெண்ணீறு
வெள்ளியவார்குழை கொண்டுவிளங்குறு தற்கேற்ப
வெள்ளியமாபடி கத்துருவாயினை மேலோயே. (சு௫)

என்றுதுதித்தரி திற்புறமேகியி னன்றேரூர்
குன்றுநிகர்த்த மதிற்புறமேய மடங்கூடி
மன்றுளெடுத்த நறுங்கமலத்தை மனத்துன்னி
நன்றுகளித்தினி தாகவிருந்தன னலமிக்கான். (சுசு)

வேறு.

மாலைவண்டிருந் தண்டுழாய்செய்தணி மணித்தோண்
மாலைவண்டுசெய் வள்ளலார்நிறமரு வந்தி
மாலைவண்டுறை சென்முனிவந்தது நோக்கி
மாலைவண்டுமுத் தீன்சிவதடமருங் கடைந்தான். (சுஎ)

சந்திவந்தனை முடித்தனன்றண்மல ராதி
முந்திநேடினன் முன்னவன்பூசனை முடியபா
னிந்தியங்களை யவித்தவனேகுறு மேல்வை
யந்திவண்ணனுங் கிரணியவிலிங்கமா யமர்ந்தான். (சுஅ)

கண்டுதாழ்ந்துதாழ்ந் தெழுந்தனன்களித்திறும் பூதுங்
கொண்டுநெக்குநெக் குருகினன்குணப்பெருங் குன்றைப்
பண்டுபோலவே நேசித்துப்பூசித்துப் பணிந்து
மண்டுபேரன்பு துன்றமுன்னின்றிவை வழுத்தும். (சுகூ)

கோடுவார்சிலை யெனக்கரங்கொண்டது மம்பொன்
பாடுசானடஞ் செய்யுமம்பலமுகன் பைம்பொன்
றேடுமால்விடை புணர்தரப்புணர்த்ததுஞ் செம்பொன்
னேடுநீர்ச்சடை யொருவனின்னருட்குறி யும்பொன். (எ0)

ஐயநின்றிரு வரையுறசசூழ்வது மாசை
னையநின்னடி யார்ககொழிப்பதும்பிறப் பாசை
யையநின்னருட் குறியுமொப்பில்லதோ ராசை
லையநின்னடிக் கேசெலுமடியனே னாசை. (எக)

ஓங்குமாமறைத் திரட்குநீயொருவனே யருத்தம்
பாங்குமேனியிற் பராபரைகொண்டது மருத்தந்
தேங்குநின்னருட குறியுமொண்செம்மைசா லருத்தந்
தீங்குதீரவெனு செவிககுநின்சிரன்றி யருத்தம். (எஉ)

வண்டுவார்குழை வள்ளன்முடிகமது கைத்துத்
தொண்டுளாககரு ணின்மகவுயிர் துலைக கைத்து
விண்டுவாதிய ரோதுநின்குறிமிளிர கைத்து
கண்டுளோர்தமக் குறுவதும்பிரபஞ்சக கைத்து. (எங)

ஒருநின்றேர்விடு பாகனுககுறையுள்கோ கனக
மருமலாக்கரம் வளைததுமன்னுதங் கனகம்
பொருவினின்னருட் குறிபொலிவுற்றசெங் கனக
மருமையானநிற் றொழுதெழுவாககுணடாங் கனகம். (எச)

எனத்துதித்துமுன் னிருந்தனன்பின்முதல் யாமம்
வனத்துழாயவன் முதலியோருயிரொடும வாழக
கனத்தினுங்கரி தாகியகண்டனைப் போற்ற
மனத்திலுன்னின னெழுந்தனன்செழுந்தவ மறையோன். (எரு)

எழுந்தமாமுனி யணிமையினேகுறு மேல்வை
யழுந்தும்வெம்பவக கடல்கடந்தாருயி ரொலலாஞ்
செழுந்தண்முத்தியங் கரையிவர்தரத்திகழ் வேதக
கொழுந்துவசிர விலிங்கமாயிருந்தது குலாவ. (எசா)

நோக்கினான்முனி நோக்கடங்காத்திரு நோக்கைத்
தேக்கினான்பெரு மகிழ்ச்சியையின்பத்துட டிளைத்தான்
வாககினான்மனத் தானளவிடற்கரு மணியைத
தூக்கினான்மறைப் படிதுதிபூசனை புரிந்தான். (எஎ)

விழைந்துமாமலை மகடழுவுறத்திரு மேனி
குழைந்துளானெனுங் கூற்றுரைமாற்றுதல் குறித்தோ
தழைந்தமாபுகழ்ச் சாமிநீகுழைதரா வண்மை
நுழைந்தவசிர மாயினைகாணநோற றேன்கொல். (எஅ)

நேயமார்தரு நினக்கமைகருவியு நீயே
பாயபேருலகஃ தறிந்துள்ளகம் பதிப்பத்
தாயனுய்தனக் கமைதருகருவியுந் தானே
யாயவொள்வயி ரகத்துறியாயினே யழகே. (எசு)

முருகுநாறுபொற் கொன்றையாய்மூவுல குய்யக
கருகுகணடநீ வயிரமாயிருக்கினுங் கண்ணிற்
பெருகுநீருற வறுபினுற்பெரிதுநெக் குள்ள
முருகுவார்க்குமுன குழைதராமையுமுனக் குண்டோ. (அ0)

வேறு.

குத்திரமினறியின்ன துதித்திருந் தனபுகூர்ந்து
பத்திரமலர்கொண்டத்த யாமத்திற் பூசைபண்ண
வத்திரமலாந்தெழுந்த மாமுனி காணமுனபோற்
சித்திரவிலிங்கமாகி யிருந்தனன் றேவதேவன. (அக)

ஆடினுனெக்கிநெற்றி யணிநிலந் தோயத்தாழ்ந்தான
மூடினனபுளகப்போர்வை முகிழ்த்தகை தலைமேலேறச்
சூடினுனுவகைபொங்கத் துளளினுன றெய்வவேதம்
பாடினனகனிந்துபூசை பண்ணினுன் பழிசசினுனே. (அஉ)

ஐயநின்னழகுகாண்டற் காயிரங் கண்கள்பெற்ற
செய்யபொன்னுலகவேந்தே சிறந்தவ னவனுநோக்கி
மையகல்கணகள்போதா வெனமனம் வருந்துவானேற்
றெய்யகண்ணிரண்டேயுள்ள சிறியனே தெரியக்காண்பேன். ()

மலைமகள்பாகங்கொண்ட வள்ளலே மறுவிலுன்சீர்
கலைமகணுவிற்கொண்ட கடவுளே மொழியவல்லன்
றலைமைசாலவனும்பேசத் தகேனென வொதுங்குவானே
லுலைவறுகல்விசாலாச சிறியனே வுரைக்கவல்லேன் (அச)

அரியநின்பாதபூசை யன்பினுற் செய்யவல்லோ
னுரியசெந்திருவாழ்மார்பத் தொருவனே யவனுமோர்பூ
விரியவத்தவறுநோக்கி யிடந்தன னொருகண்ணெனமுற்
பெரியவசிறியேன்கொல்லோ பிழையறச செய்யவல்லேன். ()

வேறு.

மண்புனலனல்கால் வெளியியமானன் மதிகதிரொனுமுரு
வெட்டும், வண்புகழ்த்தொழிலோ ரைந்திற்குமுதலாய் வயங்கு

ருவொன்பது மனுமு, னெண்படிமத்து வாக்களென்றுணாக்கு மி யலுருவாறுநன் குடையாய், பண்புசாலுறந்தைப் பதிவயின்மே ய பஞசவர்னேசனே போற்றி. (அசு)

இழிவுறுமலகே வலத்துறுமுயிர்கட் கிணர்மலருடைத்தரு வழலாய், மொழிதனுவாதி யடைந்திடுகாலை முரணுடைக்கடுஞ சிலையழலாய்ப், பழிபடுபந்த மறுத்துயாவீடு பற்றியகாலயத் த ழலா, யழிவறுமின்பா யுறைதருமுறந்தை யறநதிகழண்ணலே போற்றி. (அஎ)

கருமலமழுந்து முயிர்களைப்பற்றுங் காலமோர்ந்தருளினு லெடுத்து, மருவுடலாதி விந்துமோகினியென மாயைகளாற்கொ டுப் பித்துப், பொருவறுசததி பதிவினேசோககிப் புண்ணியக்கு ரவஞயருளிப், பெருகுமினபமுந்த வழுததிடுமுறந்தைப் பெண் ணொருபாகனேபோற்றி. (அஅ)

பூதமோபூதத் தாகியவுடலோ பொறிகளோமனமுதற் கர ண, பேதமோபரவு மாயையோவுணர்வு பெருகவாராயினமற் றி யாதென், றேதமோடுழலா வகையடியேனுக கிவையலாவொன் றினையருளு, நாதநாதாந்த போதவேதாந்த நலஙகெழுமுறந்தை யாய் போற்றி. (அகூ)

கந்தமுனைந்தா யிரதமுனைகாய்க் கதித்திடுமுருவமுன் மூ ன்றாய்ச், சந்தமெய்யுணரு மூறுமுனனிரண்டாய்ச சத்தமொன ஞய்த்தொ முதல்வா, னந்தமெண்பூத மைந்தினுநிறைந்தா யா வியாயாவியுள் ளறிவாய்ப், பந்தமாய்வீடு மாய்வயங்குறந்தைப் பஞ்சவர்னேசனே போற்றி. (கூ0)

வேறு.

நன்றுமாதீத்துமாகி யிருளுநல்லொளியுமாகி
யொன்றுமாய்ப்பலவுமாகி யுருவுமாயருவுமாகித்
தொன்றுமாய்ப்புதிதுமாகித் தோற்றமீறின்றிநின்றாய்
மன்றுளாட்டயர்வாய்காந்தி மதிமணவாளபோற்றி. (கூக)

கன்னிபேர்பாகங்கொண்டும் விகாரமில்கடவுள்போற்றி
துன்னியைந்தொழில்புரிந்துந் தொழிலொன்றுமில்லாய்போற்றி
பின்னியெல்லாங்கலந்துங் கலப்பிலாப்பெரியோய்போற்றி
மன்னியவுறந்தைக்காந்தி மதிமணவாளபோற்றி, (கூஉ)

விச்சுவாதிகனேயோங்கும் விசுவசேவியனேவேத
வச்சுவாவித்திலாம லடங்கலும்விளைவுசெய்வாய்
கச்சுவாய்ந்தெழுந்தகொங்கைக் கருங்குழற்செய்யவாய்வா
மச்சுவாகதச்சொற்காந்தி மதிமணவாளபோற்றி. (௯௩)

வானக்கண்மிடைந்தோரானும் வையக்கணடைந்தோரானு
ஞானக்கண்ணாலுங்காணாற் கரியநின்னுடனேயே
னூனக்கண்காணக்கால மோரைந்துஞ்செய்தாயொண்மான்
மானக்கண்கொண்டகாந்தி மதிமணவாளபோற்றி. (௯௪)

சீதரனிரந்துவேண்டச் செழுமலர்த்தவிசுளானை
யாதரமைந்தனாக வருளினையனையான் வேண்டத்
தாதவிழ்துழாயினானைத் தந்தனைமைந்தனாக
மாதவர்வணங்குங்காந்தி மதிமணவாளபோற்றி. (௯௫)

அறைவினையுடலேயானென் றவத்தைகடோறுஞ்சார்ந்து
மிறைதருபிறப்பிறப்பில வீழ்தராதடியேனுக்கு
நிறைசழல்காட்டியாண்ட நின்மலக்கொழுந்துபோற்றி
மறைபுகழுறந்தைக்காந்தி மதிமணவாளபோற்றி. (௯௬)

தருமவெள்விடையாய்போற்றி சக்கரப்படையாய்போற்றி
குருமலிசடையாய்போற்றி கொடுமனத்தடையாய்போற்றி
மருவதளிடையாய்போற்றி மணங்கொளாததொடையாய்போற்றி
யொருமகள்புடையாய்போற்றி யுறந்தைவாழ்வுடையாய்போற்றி. ()

சுருதிசொனேசபோற்றி சுயம்பிரகாசபோற்றி
தெருள்பவநாசபோற்றி சிவபுரவாசபோற்றி
பொருதமூலாசபோற்றி புணாதராபபாசபோற்றி
குருவளாமகேசபோற்றி கூவிளவனேசபோற்றி. (௯௮)

நிறைதருமன்புபொங்க நெக்குநெக் குருகியுள்ள
மறைமுடிவிளங்குந்தெய்வ மாசிலா மணியையிவ்வா
றறைதருதுதிகள்பேசி யானந்தவெள்ளத்தாழ்ந்தா
னுறைதவப்பெருமைசான்ற வுதங்கமாமுனிவன்மாதோ. (௯௯)

தண்மைசாலுதங்கமேலோன் றன்னெதிர் பரமன்றோன்றி
வண்மைசான்முனிவவேண்டும் வரமெவ னுரைத்தியென்ன
வுண்மைசாலடிகள்போற்றி யொன்றுமி லாதநாயேற்
கண்மைசால்பெரியோர்க்கேயா மருள்பெற வளித்தியைய. (௪00)

இதனின்மேலிழுதைமேன்கொள் வரமெவ னிமையோர்வாழ்வு
மதனுடையசுரர்ச்சாடும் வச்சிர பாணிவாழ்வுஞ்
சததளக்கமலமேயான் வாழ்வுந்தண் டுளபத்தோளச்
சதனுடைவாழ்வும் யானோர் துரும்பெனக் கழித்துநின்றேன். (க0௩)

ஐயவித்தலமும்வாச வலாச்சிவ தட்டுமேலாஞ்
செய்யசின்குறியுமென்பேர் சிவணியே விளங்கலவேண்டும்
பொய்யகலன்பினின்றுள் பூசிக்க வென்றும்வேண்டு
மையறவீற்றுமுத்தி வழங்கவும வேண்டுமின்னும. (க0உ)

ஐந்துகாலங்கடோறு மைந்துரு வங்களான
மைந்துசேருருளுமின்ன வகையெனத் தெரிக்கவேண்டும
பைந்துழாய்விடையாயென்னப் பணிந்தனன் பரமனுள்ள
மைந்துளாற்கைந்துவண்ணங் காட்டிய நலமுன்சொற்றேன். (க0ந)

அன்னதுநுமக்குச்சூர வாதித்தன் கதையிற்றேன்றும்
பின்னர்மெய்க்கதியாண்டோரா யிரனுசெலப பெறுதிமற்றை
யென்னவும்வழங்கிருமென் றிலிங்கத்துண் மறைந்தானைய
வன்னயமுனிவிர்தேர்மி னென்றுநன் குரைத்தான்சூதன். (க0௪)

சீர்மிகுமினையகாதை செவியுறக் கேட்போரொன்று
நார்மிகுமுளத்தமைபோா நற்றவன் றுதித்தயாவு
மேர்மிகுபஞ்சவர்ண ரொதிரநின்று துதிபபோாசெலவம
பார்மிகுவாணிற்றுய்த்துப பரகதி யடைவர்பின்னும். (க0௫)

பஞ்சவர்ணப்படல முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-௬உ0.

## கத்துருப்படலம்.

பத்துருவுடையமாயன் பரவுமைந் துருவமைந்த
சித்துருவமலன்மேன்மை செஞ்செவிக் கினிமையாக
முத்துருகீர்த்தவெண்பன் முகிலுருப் புனையுங்கூந்தற்
கத்துருவான்பாற்கேட்ட காதையை யெடுத்துச்சொல்வாம். (க)

அருமறைநான்காறங்க மமைந்தவா கமங்கணூலேழ்
பெருகுபாகமங்கண்மற்றைப பிறங்குநூல் யாவுமோர்ந்தா
ஞெருவினல்லொழுக்கமெல்லா மோருருக் கொண்டதொப்பான்
கருமலமுனிந்துநின்ற காசிப முனிவனென்பான். (உ)

மறைகள்வாழ்த்தெடுப்பவம்பொன் மன்றநின் றாடல்செய்யு
நறைகமழ்கொன்றைவேணி நாயனா தூயபாத
நிறைதருமுளத்தான்றெய்வ நீற்றொளி பழுத்தமெய்யா
னறைதருமவன்றன்மேன்மை யாவரோ யறிகிலாதார். (௫)

அனையமாமுனிவற்கம்மா வருந்தகி யனையகற்பின்
மனைவிமாரிருவர்தெய்வ மகளினை யழகின்வென்றார்
முனையுவேற்கண்ணினாரம் முனிவனுக் கிருகண்போல்வார்
புனையுநாயகன்றனேவல் போற்றிமின் றொழுகுநீரார். (௬)

மற்றவர்தம்முண்மூத்தாண் மறலியுண் ணடுங்கியோடச்
செற்றவா * டடற்றொளிக்கச் சீறுகண் வினதையென்பாள்
பொற்றசிரிளையாள்பொாஙகிப புடைத்துவாா கிழித்துவீங்குங்
கற்றடமுலைசுமந்த கத்துரு வென்பாண் மன்னோ. (௭)

வேறு.

கனமலர்க்குழன் மாதாகளிருவருங் கருங்கொடிகண்ணுக
வனகமாதவ முனியுமக்கண் மணி யாயொழுகுறுநாளில் [ள
வினதையெனபவ ளருண னுக்கிளவன்முன் விகங்கம்யாவையுமீன்று
பனகம்யாவையு மீன்றனளிளையபொற் பாவைகத்துருவென்பாள். ()

குறைவுதீாதர மகவுயிாத்திருவருங் குணமிகவாழ்நாளுட்,பொ
றைகொண்மாமுனி காசிபன்வாசவொண் புதுமலர்க்கருங்கூந்தற், க
றைகொள்கூரயி லனுக்கியம்பலைத்துவெங் கடுமருட்டியவாட்கட், பி
றைகொள்வாணுதல் வினதைபால்மனம்பெய ராவகை † பிணைவை
த்தான். (எ)

கடங்கொண்மாமுலைத் தடஞ்சுமந்தொசியிடைக் கத்துருவஃ
தோர்ந்தா, டடங்கொண்மாதவ முனிவரன்மயங்கிய செயலெனமன
த்தோரான், விடங்கொள்வாள்விழி வினதையேமயக்கினண் மெய்
யெனவனையாண்மேன், மடங்கொணெஞ்சிடைக் குய்யம்வைத்தன
ளது மாதருக்கியல்பன்றே. (அ)

ஒருவர்தந்தன் ரதிவெனிவிலக்கண முணர்ந்தவராண்பாலே [க்
மருவவப்பொதுப் பெயர்வினைக்குறைசெய்து மாற்றுவர்பெண்பாலை
கருவிமாமுகிற் கருங்குழற்செய்யவாய்க் கத்துருமுதலாய
வுருவவோடரித் தடங்கணார்மட்மையை யுள்ளுறவுணர்ந்தன்றே. (௯)

* தடறுறை. † பிணை-ஆசை.

அலைதிரைக்கடல் கடைந்தெடுத்திடுசுதை யமரரேகவாந்துண்ணச்
சிலைவலிபுயத் தானவர்வறியராய்த் தேம்பியசெயன்மானக்
கொலைவிடக்கரு நெடுவிழியினதையே கொழுநன்மாட்டுறுமின்ப
நிலைமையிற்பெறமெலிவலோயானென நெட்டுயிர்ப்பெறிவாளால். (கo)

இளையளாயயா னிருக்கவுமகிழ்நனை யிரவெலாமவசஞ்செய்து
விளையுமின்பமிக் கனுபவிப்பாளொரு வினதையேநனவின்க [ரல்
ளுளையமெலலணை மிசைந்தனிகிடந்தியா னுயிர்த்துயிர்த்துறநகுற்
வளைதருநகன வின்கணேநுகருவன மணமகனருபோகம். (கக)

இனியகாதலனிடத்திவள் சாரவதுமென்னையே திலளாக்கத்
தனியவாய்பபல வுரைபபதுமறவினித தடுபபனமற்றதுகாறு [டாள்
முனிவுநீஙகிநட்பாகியே யொழுகுவன் முறைமையினெனக்கொண்
கனியவாவுமஞ் செயயவாய்ககரியசட் கததுருவென்பாளே. (கஉ)

இனையள்குய்யமவைத் திவ்வணமொழுகுற விதயத்துமெய்வைத்தே, யனையள்பண்டுபோ லொழுகுறுநாளகளி லன்பின்முன்னவளோர்நாட், புனையலர்த்தொடைக் கருஙகுழலவெண்ணகைப பொற்றொடியிளையாளே, துனையவாபயப் புணரிசாரந்ததன்வளத் தொகையுறிவாமென்றாள். (கங)

என்றுரைத்திட முன்னவளபொருககென வெழுந்தனளிளையாளு, மொன்றுமுள்ளமுற் றவளொனநடந்தன ளுவந்துசென்றிருவோருந், துன்றுசெய்யதா மரைபலமலாந்தொரு சுடாவிடுமுழுநீலக், குன்றுதான்கிடந்தெனக்கிடந்தரிதுயில் கொளுங்கடலடைந்தாரே. ()

கருமபினுஞசுவை கனிநதவந்தீஞ்சொலவண் கவின்குடிகொளவீங்கி, யருமபுகொஙகைமுன் மஙகைதனறஙகைமெல் லஙகைசெங்கையிற்பற்றிச, சுருமபுகிண்டுதாக் கருஙகுழலிளையமென் றேரகைநீகாண்கென்று, விரும்புபற்பல வளமெலாங்காட்டுபு விரித்துரைசெய்வாளால். (கரு)

தங்கணுயகன் றேன்றியபேரிடத் தனிவளநனிநோக்கத்
துங்கவாளுடுக் கணமெலாமிவண்மரீஇச் சூழ்ந்துறைந்தாற்போலப்
பங்கநீத்தவெண் டரளஙகணெடுங்கரைப் பரபபெலாஙகிடந்தம்மா
செஙகணேற்றிமின் மூலையினுயொளிருமத் திறபபெருவளநோக்காய்.

கன்னிபாகன்வெண் ணீற்றணிமேனிமேற் கவின்றசெஞ்சடைவீழ்ந்து
மின்னினுலென வித்திருப்பாற்கடல் வெண்டிரையெழுந்தோறுந்

துன்னிமேலெழீஇ யொண்பவளக்கொடி துலங்குறுவளமன்பு
மன்னியென்னுடன் ஞேன்றியகிளரிள மடக்கருங்குயிலேனுக்காய். ()

வேறு.

பொருவின்மாதேவன் செஞ்சடைக்காட்டுட் பொருந்துமந்தாகி
னிபுனலின், மருவுவெண்பிறையா டுதலபொரப்படாநத வாரகொ
டிச்செந்துகிரக்காட்டு, வொருவுருத்தீமபா லாகியபுனலி னுற்றகூன்
வளைவிளையாடுந், திருவுலாமவளம்பூ மருவுலாங்கூந்தற செருவுலாம்
வாட்கண்ணிநோக்காய். (௪௯)

திருமலனங்கை விரலிற்காழியுமொண ணிறத்தினுக் கொரும
தாணியுந்தம, முருவெடுத்துதவி யிருபுகழ்தமக்கு முறுத்தியபிரான்
றுயிலிடமென், றொருவுருவாகிக் கயல்கமடங்க ளுறுகளியடைந்துலா
ம்வளத்தைக், கருவிழிசசெவ்வாய் வெண்ணகைப்பசுந்தோட் கத்து
ருமாதுநீநோக்காய். (௫௰)

பருமணிசெறியிவ் விரங்குவெண்டரங்கப பாற்கடல்பட்டமும
தனுண், மருவியெஞ்ஞான்று மரிதுயிலமரு மாமணிவண்ணனுமவா
ணப, பொருவருமுழுவெண் மதியமுமதனுட் பொருந்தியகளங்கமு
மானும், பெருவளமபெருகு முலைசுமந்தொசியோர் பிடியிடைப்பிடிந
டைநோக்காய். (௨௰)

இத்தகுவளங்க ளினையவளுணர வெடுத்தெடுத்தியம்பினள்
காட்டி, முத்தவெண்முறுவற் கூற்றொருமபொருத முடங்கல்விட்
டெழுதருதடங்க, ளுத்தமவினதை நின்றிடுகாலை யும்பாகோன்புர
விமேற்செலலு, மத்திறமுணர்ந்தவ் வினதைபின்னவளுக் கறையு
மப் புரவியின்வரவை. (௨௧)

முருந்திளமுறுவற் கனிபடுதுவாவாய் முகிழ்முலைத்தங்காய்நீ
கேட்டி, மருந்துகொள்பாக்கு வானவாமேனள் வளர்ஞ்சிறிதாழிய
க்கடலாத், திருந்துவெண்மதியந் தறியெனநாட்டித் தின்வரைமத்
தெனக்கூட்டிப், பொருநதவாசுகியை நாணெனபூட்டிப பொங்குற
க்கடைந்தனர்மாதோ. (௨௨)

சடையிடைமதியந் தவழ்தரவைத்த தம்பிரானனுறைவாங்கா
து, கடைதலினூறுய்க் கொடுவிடந்தோன்றக் கண்டுமாலயன்முதல்
யாரு, மிடைதரவோடி வெள்ளிவேதண்ட மேவினர்பணிந்திரந்த
னவ், விடையிருந்தேயப் பரனழைத்தொருகை யேந்தியவ்விடத்
தினையயின்றான். (௨௩)

அழைத்துவெவ்விடத்தை யமுதுசெய்ததுகண் டமரரவென்ற டிபணிந்து, பிழைத்தனமபிழைத்தே மென்றரியயன்முற் பிறஙகு வானவரெலாம்பெருமான், றழைத்தபேரனுளை கொண்டனாமீண் டு தண்கடன்மதித்திடவுதித்த, விழைத்தடமுலைமா வொடுகவுத்து வமு மிணாத்துழாய்மாலையன்கொண்டான். (உச)

மிருசுவையமுதம் விண்ணவாகொண்டாா வெறுமையையடை ந்தனரசுரா, தொகுமலாத்துணாததேஙகற்பகத்தருவுந் தூயதேனு வுஞ்செழுநிதியு, ரகுமருபபொருநான் குடையகுஞசரமு நண்ணலா துண்ணெனத்தாவிச, செகுதிறனமிக்கு விளஙகுமிவ்வுசசைச் சிரவ மூமிந்திரன்பெற்றன. (உரு)

ஞாலமேற்புரவி பலவுளவிதுபோ ஞடினுமொருமறுவின் றிக் கோலமாாமேனி முழுவதுமவிளாத்த குணததுகண்டதுமுண்டோ சாலநீநோக்கா யிபபரிகருரியா டடமுலைகொடியயிராணி யாலவடிருவே திருவெனவுரைத்தா ளன்புருவாகியவினதை. (உசு)

புள்ளவாமன்னை யுரைக்கவஞ்சனையிற் புகலுவள்கத்துருவெ ன்பா, ளுள்ளதேயுரைத்தா யாயினுமபடிறெுன் றுளைதாலதனிடை யந்தோ, வள்ளவாய்மலரோன் மகன்வயிற்பிறநதுவநது காசிபன்ம னையாய, கள்ளமொன்றறியா ராமிதுபேசக கற்றதெங்கோகொடிதெ ன்றுள். (உஎ)

பஙகமில்வினதை யெஙகையேயுண்மை பகர்ந்தனன்பொய்யிலை யென்று, டுஙகமாாதருநீ தவ்வையாதலினின் சொலலெலாமெய்மை யேபுரவி,பஙகமவெண்ணிறமவான் மாத்திரங்கறுபபென் றறிநதிலை போலுமவாள்விழியிற், றிஙகள்வாண்முகத்தாய பொருந்துறநோக்கி த் தெரிநதுபின்பகரொனறு ளிளையாள். (உஅ)

கருநிறமவான்மற் றுடலெலாமவெண்மை கலந்ததிபபரிக்குென விசைத்தாய், திருவளுய்முழுதும வெண்மையேயிதனைத் தேர்ந்து பின்னுாையென்றுளவினதை, மருமலர்க்கூந்தலிளையளுமென்சொல் வாய்மையே கருமைவாலொழிந்த, பெருவடிவனைத்தும வெண்மை யேயென்றுள் பெரிதுமூண்டதுபெருங்கலாமே. (உகூ)

- தவ்வையிப்பரிவால் வெண்மையேயென்று டங்கைமற்றதுகறு ப்பென்றுள், செவ்வையென்மொழியே மெய்யென்றுண்முன்ன டிரு ந்துமென்மாற்றமே மெய்மை, கொவ்வையங்கனிவா யெம்பெருமாட்

டி குழித்துணைபொன்றன ளிளையா, ளவ்வயினிவ்வா றிருவருங்கலாய்த்தாரறைதரு சமையவாதிகள்போல். (௫௰)

ஒருவருக்கொருவ ரிவ்வணங்கலாயத்தே யுறுபெருஞ்சினந்தலைக்கொண்டு,பெருகுறுவசைசசொற் களுமபலவாகப பேசிவஞ்சினஞ்செயத்துணிந்தார, பொருவறுதவத்தாற் கலவியாறபொறையாற் புகழினுற்றனகிணையிலலா, வருமைசானமுனிகா சிபனமனைவியரா யமைந்தமறறிவரிருவோரும. (௫௧)

மிககவென்னுரைமெய் யாயிடினிளையாள வினதையென்னுகுவையெனறு,டககவெனனுரைமெய யாயிடினமூததா டஙகையென்னுகுவையென்றாள,புககவாமபரியின் வாலவிளாடபென்னிற் பொருந்துமென்வாழுநாளளவுந, தொககநின்பணிசெ யடிமையாகுவலிச சூடவறேன்றவனுளே. (௫௨)

என்றனணெஞ்சம வஞ்சமவைத்திளையா ளெயிற்றருமபிலஙகுறநக்கு, மன்றலஙகுழலாய தெயவதபுரவி வானிறஞ்சிறுகறுபபெனினு,மொனறநின்னடிமை யாயபணிபுரிவே னுரைததவஞ்சினந்தவறேனயா,னின்றவெனமகிழ்ந னுளையெனறுரைததா ளிகராறுகுணபபெருவினதை. (௫௩)

வஞ்சினமிவவா றியற்றினரிளையாள் வானிறமவானிற மென்றவெஞ்சினவினதா யறியலாமபரிசேல விணபுகூஉ வருதியென்றுரைத்தா, ணெஞ்சிலவஞ்சிலலா வினதைநீராடி நியதிதீாததிற்புகுந தீரந், துஞ்சியவுடைசூழ்ந தடைவனிஙகென்று சொற்றனளபோயினண் மாதோ, (௫௪)

மூன்னவளாய கன்னலஙகுதலை மொழியினுள் போயினபின்பு, பன்னருஙகொடிய பழவினைத்தொடாபாற் பாவைசத்துருவெனுஙகொடியா,ளுன்னருமவஞ்சம புரிவதறகெண்ணி யுரகமாகியமக வெல்லா, மின்னினிவருக வென்றுகூயினளவங் கிறுத்தனவன்னைபால யாவும். (௫௫)

வேறு

அரவமயாவு மணைந்தடிதாழ்ந்துபூங
குரவவாாகுழற் கோற்றொடியன்னைநீ
பரிவினெம்மை யழைத்தபணியெவன்
விரைவிற்றுதியென் றுவிளம்பின. (௫௬)

உரகமின்ன வுரைக்கவுவந்துநீக்
கரவுமேவுளக் கத்துருவோதுவாள்
பரவுந்தந்தையைப பாவிமுன்னுளேனைத்
தரணியோரகத் தன்வசமாககினாள். (ஙஎ)

எனையுமெண்ணல ளெண்ணருநும்வலி
தனையுமெண்ணல டன்றொழிலாலவருமம
வினையுமெண்ணலள் வெய்யவினைதையா
ணினைவுகூரவி தாரிடைக்கூறுகேன். (ஙஅ)

சீற்றமோவு செழுந்தவனெனொடு
மாற்றமொன்று சொலற்குமனமபொரு
ளேற்றமிக்க சிறுமையுண்டாககியென்
னாற்றந்தீரக் கொடுமைநடாத்துவாள். (ஙகூ)

கணவன்மாற்றவள கைவசபபட்டதாற்
புணருமெய்பபாரம் போககததுணிந்தன
னுணர்வின்மிக்கமக் காளுமைநோககியே
தணவுறுதுயிர தாஙகி யிருககின்றேன். (ச௦)

அனையளோடிங் கனைந்தனனிற்றைநாள்
புனையுந்தெய்வப புரவியைக்கண்டன
ணினையுமவாலவிளர்ப பென்றுநிகழ்த்தினாள்
வினையள்யான்கறுப பென்றுவிளமபினேன். (சக)

காரிவாமபரிவால கறுபபென்னிலயான்
சீரினின்பணி செய்வலென்றாளவண்
மூரிவால்விளர்பபென்னிலுன் மொய்தொழி
லாரியாவலென் றியானுநவிற்றினேன. (சஉ)

ஆதலாலிங கவள்வருமுன்னநீர்
மாதர்வாமபரி வாலசறுபபாயிடப
போதந்தாலம்புகுத்திற் புழுங்குமென்
னேதந்திருமொன் றின்னமுங்கேட்டிரால் (சங)

பணியெல்லாந்தொழப பாக்கியஞ்செய்துளேன்
பணியெலாம்புனை பாவைவினதைவாய்ப
பணியெலாஞ்செவி யேற்றுப்பதைத்தவள்
பணியெலாஞ்செய் தனர்படுவேன்கொலோ. (சச)

தாயாசொற்ற பணிதலைத்தாங்கியே
பாயநேயத் தொடுமபரிந்தாற்றுதற்
காயவசசுத ரசசுதரன்பினா
தூயாநலலா சுகுணசொனுமறை. (சுரு)

நலகுதாய்சொல வழிநடவாதவ
ரலகுநாய்வயிற் றுருவாமுத்தர
மலகுநிமைமி லேசசருமவாயநிண ம
பிலகுவேடரு மாவராபேயாபின் (சசு)

ஓதிமேன்மையுற் றாபயிழைத்தோருமாயத
தீதிவாநத நரகமெலலாந்திளைத
தேதியஙகி யிளைாாயொனப சொலு
மாதிநூலென் றறைநதனளகத்துரு. (சஎ)

அலலவாஙகுழ லாளுரைகண்வழிச
செலலவோாந்த வுரகஙகளசெபபுறு
மலலலசாரு மனத்தெனனிளைததனை
நலலதோவிது நாடுயினன்னையே. (சஅ)

பெரியதாயவள பெற்றவணிவினை
யிரியவெண்ணுறு நீவிரிருவரு
மரியக்ாசிபன் பன்னியராயிலயாந
தெரியவேற்றுமை யல்வழியேசெலவோம. (சகூ)

நன்றுநீசொலிற் செய்துநலமிலா
தொன்றுசொலலினுஞ் செயயலமுனனினு
மெனறுநலலண்முன றுயெனழிசைத்தன
கன்றுசீற்றக்கடுவுடைப பாந்தள்கள். (ருo)

வேறு.

இவவாறர வஙகளியமபியதற்
கொவ்வாமொழி யொண்செவியிற்புகவுஞ்
செவ்வாய்வினதைக் கிளையாள்சினவா
வெவவாயின்விளம்பின் ளின்னவையே. (ருக)

மன்றுயுரை நீவிர்மறுத்தெதிரோ
மூன்றுயை நயந்துமொழிந்தமையா
லின்றுதிநு மெண்குலமன்னைகளே
கொன்றுவி குறைக்கநசித்திடுக. (ருஉ)

அல்லாதுமையா ளெதிர்நோக்குறினும்
பொல்லாது புடைத்துவருத்திடுக
வல்லார்சொன் மனுத்தடையுண்டுழல்க
வொல்லாவறு ரூற்றெனவைதனளே. (ருஉ)

ஈர்க்கோட விடைக்கடையின் றியிரு
வாக்கோடவை யென்னமதாத்தமுலே
நீர்க்கோடது நோகளநேரிழைதாள
கார்க்கோடகனுட் கனிவிற்றெழுதே. (ருஈ)

தாயுன்சரணரு சரணந்தமியேன்
வீயுந்திற மேவமுனிந்தருளே
லாயும்பரிவா லடருங்கருமை
யேயுமபரிசின னினியேபுரிவல. (ருரு)

வேறு.

வெண்மைகருமை யாமாறு செய்தலரிதோ மிககருணைத்
தண்மையுடையா யிவணுறைதி சற்றியானீ சொற்றபடி
யுண்மையெற்றி வருகுவலென் றேடிபபரிவா லுறக்கடித்துத
திண்மைவிடமூட் டுபுகருமை செய்துமீண்ட தபபாந்தள். (ருசு)

வந்தபாந்தள் வலிநோசகி மகிழ்ந்துநாளு மெனககடிமை
சந்தவினதை யாயினண்மற் றவள்சேயபிடரின் றலையிவாந்து
நந்தநெடுவான புவிமுழுது நடத்தித்திரிதி மதலாயென்
றந்தண்மொழிகள் பலபேசி யிருந்தாணின்ற வருமபழியாள். (ருஎ)

ஆயகாலை வினதையுமவா தடைந்தாளிளையா ளொடுமடைந்து
மாயனிறம்வண் பாற்கடலை மதியாமுன்னங கண்டவாகள்
பாயவிடந்தோன் றியபினனும பாாத்தாலென்னப் பரிநெடுவாற்
றாயவெண்மை கருமையாய்த் தோன்றக்கண்டா டியர்கண்டாள். ()

பந்தோபொன்னங் குடமோவென் றுரைக்கபபணைத்த படாமு
லையா,ளந்தோவிதியை யார்வெல்வா ராகெட்டேனென் றங்கைநெரித்,
திந்தோவெனுநன் னுதலிளையா யிகலவாதுனையேன் முன்னென்று,
முந்தோதினாசொன் மறந்திதனை முடித்துக்கொண்டேன் முடிவறி
யேன். (ருகூ)

மாதேயென்சொன் முழுப்படிறே மற்றுன்மொழியே மெய்யித
ற்குத், றீதேயிலையான் முன்செய்வினைத் திறமிபபரியா யெதிர்வந்த,

நீதேமுறைமை யருங்கொடுஞ்சூ ளிசைத்தேனென் றுந் தவறேனிப்
போதேயடிமை நினக்கானேன் புரிகின்றேனின் பணியனைத்தும். ()

என்றவினதை வஞ்சிக்க விளையாளிளையாள் பணிபுரியா
நின்றவளவிற் கொடுங்கார்க்கோ டகனீள்கருடன் மிதேறிக்
குன்றுங்கானுங் கடற்கரையுங் குளிர்வானகமும் பாதலமுஞ்
சென்றுதிரிய நடத்துமவா செல்லலசொலல வல்லரோவா. (௬௧)

முன்னுளிவளென் றனந்தமையாண் முடியும்பழியாய்ப பின்ன ரிதென, றுன்னுளபணிகொண் டுறுகளிதன் முலைபோலவீங்கி யெ ழவுறைவாள, பின்னுளவள்சொல் பணியெல்லாம் பிழைபடாம லிய ற்றியற, மன்னுண்மேனி தனதிடைபோ லருகவருநற் றொழுகு வாள். (௬௨)

தேன்றாழ்கமலப் பொகுட்டுறையுந் தேவன்மதலை பாற்றோன்றிச்
சான்றோர்புகழுங் காசிபமா முனிவனமனைவி யாய்த்தன்னை
யீன்றாளடையுந் துயர்நோக்கி யிரங்கியேங்கி மெலிந்துயிர்ப்புங்
கான்றுகுலமுற் றுடைந்தசிறைக் கருடன்சிறைதீரத் திடக்கருதி. ()

சிற்றாயடிகள் வணங்கியிரு சிறைகொளளையீன் றெடுத்தவொரு
நற்றாய்சிறைவிட் டருளுதியென் றழுதுவேண்ட நயந்தென்பா
லுற்றாய்சுதையென் மககளுண்ண வுதவிலவிடுவ லென்றனளன்
பற்*றாய்புரிந்த கொடியாணமற் றதுகேட்டெழுந்தா னடற்கலுழன்.

தூயதிருப்பாற் கடலடைந்தான் சுதைசூழ்தருதீச † சோவழியப்
பாயசிறைக்காற் றற்புணரிப் பான்மேலெழுப்பி யுள்புக்கான்
மேயபலகா வலருமவண் வெகுண்டாரொந்தா ரவாவலிமை
யோயவடாத்தா னுண்ணடுங்கி யோட்டட்டொருமாயனுக்குரைப்பார்
வேறு.

ஐயமாமேரு விருசிறைபடைத்தெ கடைடந்தெனவடைந்தன ரொருவன், மெய்யவனெறுமெம் போலியரொடுத்து விளம்பரிதமிர் தினைச் சூழ்ந்த, செய்யசோவழலைச் சிறைவளிகொடுமேற் றெண்டி ரையெழுப்புபு நுதுத்தவ், வெய்யவனெம்மை யடர்த்தனன்பொருத மிடுக்கின்றிதின்புடை வந்தேம். (௬௬)

என்றலுஞ்சினமீக் கொண்டுநாற்படையு மெழுகவென் றைம்ப டையேந்தி, மன்றலஞ்சுவைததே றொழுகுபைந்துளப மாலிகைதா ழ்தரு நீலக், குன்றநேர்புயத்து மாயவனெதிர்ந்தான் கொதிகொதி

* ஆய்-வருத்தம். † சோ-மதில்.

தெழுந்தவன் படைகள், வென்றசீர்ப்பறவை வேந்தனேவளைந்து மிக்கபோர்புரிந்தன மாதோ. (கூஎ)

படைபலசூழ்ந்து பொருவதுதெரிந்து பரிதிதோவலவனுக் கிளவன், மிடைதரவிருகா னகங்களிற்கோத்து வீசியும்விரிந்தவெண் டிசைதோ, றடைதரவாயாற் கவ்விவிட்டெறிந்து மண்டமெல்லாநிலை குலையப், புடையிருசிறைக்காற் றெறிந்து ‡ துய்யென்னபபோக்கியுந்தொலைத்தனன் மாதோ. (கூஅ)

மண்ணிடைக்கிடக்கும வாரியின்மிதககும் வரையிடைவீழ்ந்துட லுடையும், விண்ணிடைபபதியுந திககிடைச்செறியும் வேலினுங் கூருகிர் பாய்ந்த, புண்ணிடைபபொழிநெய்த் தோரிடைமுழுகும புகலிடமெங்கெனச் சுழலும, கண்ணிடைபபுகுதற் கிடமறமிடைந்த கரியமால்படைபொரும புள்ளால. (கூகூ)

மாப்படையுடைந்த தன்மையுஙகலுழன் வன்மையுநோக்கிய மாயோன், சேபபடைவிழியிற் சிதர்தரப்புலிஙகஞ் சினந்துமாமேருவுங் குலுங்க, நாபபடைக்கடவு ளியற்றியவாறு நரலைசூழ்தருபெரும் புவியும், பாபபடையுலகு நடுஙகவூதினன்செம் பவளவாய வெள்வளைவைத்து. (எ0)

மாயவன்சங்க முழக்கொலிகேட்டு வாயொலியெழுப்பினன் கலுழ, னுயபல்வரையுஞ் சிதர்ந்தனவதிர்ந்த வமராதமபதமெலா முதிர்ந்த, காயவொள்ளுடுக்கள் விண்டதுபுவியுங கற்பத்தின்முடிவுகொலென்று, பாயபலவுயிரு மொடுஙகினவமமா பறவைவேநதெறுமையென் னுரைக்கேன், (எக)

கார்முகங்கோட்டிக் கடிதுநாண்பூட்டிக் கைவிரற்கோதையு மாட்டிப், பார்முகஙகிழியக் குணத்தொனியோட்டிப பற்பலவாகணை கூட்டிப, போராமுகமபொலியு நாரணனெய்தான பொருசிறகடித்தொலி யெழுபபிக், கூர்முகஙகொடுசரா வண்டெலாமறியக் கொடுஙகங்கொடுபிளந் தெறிந்தான். (எஉ)

வில்லினுல்வேற லரிதெனநினைந்து வெண்ணகைக்கருங்குழற் செவ்வாய்க், கல்லினுலொளிரும பொற்பணிசுமந்த கதிர்முலைததிருவுறை மார்பன், மல்லினுலுயர்ந்த தண்டினைசசுழற்றி வானமுநடுஙகுற வெறிந்தா, னெலலினுன்மிக்கான் கால்களிற்பற்றி யிறுத்தனன் கறித்தது தன்னை. (எங)

‡ துய்-பஞ்சின் நுனி.

நன்றிவன்வலிமை யென்றுளத்துணர்ந்து நாரணன்கூரணிவி யவா, டன்றிருத்தடங்கை பற்றினன்வீசத் தாய்ப்பறந்தொலித்து வான்பறவை, வன்றிறல்வேந்தன் றுள்ளிமேலெழுந்த வான்கயல்வ வ்வுதல்போல, வென்றிகொள்வாளைக் கால்களின்வவ்வி விண்ணவர் வெருவுற வெறிந்தான். (எச)

திருமகண்மூலைக்கோ டுழுதுழுதுமுக்கத் தேம்பொழிதிருத்து ழாய்மாாயன், றிருகுவெஞ்சிற்ற தலைகொளவலைக்குந் திகிரியைச் சுழற்றுபுவிட்டான். கருதிருட்பகையைச் செந்நிறப்பாந்தள் கவ்விய தெனவலியசுரர், கருதுதோறஞ்சத் திகிரியைவாயிற் கவ்வினன்மத னுடைக் கலுழன். (எரு)

பன்னகவணைமேற் பஙகயமபூத்த பச்சைமால்வரையெனக் கிட ந்து, கன்னலங்குதலைத் திருமகளிருகை கழல்கடைவரவிழிவளர் வோன்,பொன்னகுவரைநேர் மேனிகொளிவனைப் பொருதுவெல்லு தலரிதென்று, முன்னும்வஞ்சனையால வெலவதற்கெண்ணி மொழிந் தனன்பவளவாய் மலர்ந்து. (எசு)

நின்பெருவன்மை நோக்கினமகிழ்ந்தே நீயெவனினக்குவே ண்டியதெ, னன்பொடுதருது முரைத்தியென்றுரைத்தா னரவணை மேற்றுயிலண்ணன், மன்பெருந்தவத்துக் காசிபமுனிவன் மைந்த னென்றாழுடைவலவன், றன்பெருந்தம்பி யெனவுடையபெயருஞ் சாற்றுவர்கருடனென் றியாரும். (எஎ)

படைபலசுமந்தென் னெடுநனிபொருது பண்ணவர றிதரும்ப டிதோற், றுடையநின்னிடையான் பெறத்தகுங்கருமமொன்றுமின் றுணாதிநீயாவ, னடைதரவுனக்கென் வேண்டுவதுரைத்தி யருளு வனென்றனனகருடன், மிடைமதுகரங்க ளடைகிடந்துறநகு மெ ன்றுழாயவனமகிழ்ந் துரைபபான். (எஅ)

மலைமகள்பாகங் கொண்டமாதேவன் மன்னருளாலுல சனை த்து, நிலைபெறபுரக்குங் கடவுள்யானுணாதி நின்னுரைவாய்மையே யென்னி, லலைவறவிவாந்தியா னடவுதற்கென்று மமைதருமூர்தி யாகென்றான், முலைசுமந்திளைக்கு மிடையுடைக்கமல முற்றிழையு றைதருமார்பன். (எகூ)

ககவிறைகேட்டுக் கலங்கிமூர்ச்சித்துக் கருத்தினுளொருவகை தெளிந்து, தகவுரைத்திலைநீ வஞ்சிக்குழ்விதத்தென் றுய்க்கிளையவ

புனைதுகிலொற் றிமெய் யீரம்போக்குபு
வனைமலர்ச்சிகழிகை வயங்கச்செய்துபின்
றனைநிகர்மதிக்கலை தழூவிநிற்பதே
யனையவெண்பட்டிடை யகமுடுத்தியே. (௧௯௭)

விலைவரம்புணர்வதற் கரியமெல்லிழைத்
தலைமையின்விளங்குமுத் தரியஞசாத்துபு
கலைமறைமுடியுமென் னுளமுங்காணிகொ
ணிலையுடைபபுகழ்த்திரு நீறுசாத்தியே. (௧௯௮)

திகழ்தருதநகுல தெய்வமாகியே
நிகழ்தருகூவிள கானநேசனைப்
புகழ்தருவார்கதி புகுதப்பூண்வினை
யகழ்தருபரமனைப போற்றிப்போற்றியே. (௧௯௯)

மணிமுடிகுண்டலம் வயங்குதோள்வளை
யணிகெழுபதக்கமுத் தாரமாழிக
டிணிசுடர்க்கடகநாண் கழன்முற்செப்புபல்
பணியுமாங்காஙகுறப பண்பினுற்றியே. (௨00)

காவதநாறுதண் களபம்பூசிய
மாவலர்மாாபிடை வண்டுகிண்டுபல்
பூவலர்மாலையும் பொலியுமாத்தியங
கோவலர்மாலையுங் குளிரச்சூட்டியே. (௨0௧)

வல்லியமுயர்த்தசீா வளவாசிங்கமே
கல்லியறடமபுயக் கற்பதாருவே
பல்லியமுழக்கொடு பலரும்போற்றுற
வெல்லியன்மணவனைக் கெழுகவென்றனர். (௨0௨)

அந்தணர்பற்பல ராசிகூறிட
வந்தியர்மங்கல வாழ்த்தெடுத்திடச்
சந்திரனிகாகுடை நிழறயங்குறச்
சுந்தாக்கவரிதோ கையரிரட்டவே. (௨0௩)

புரவலர்கைகுவித் தேத்திப்போதரச்
சுரர்புகழ்மிகுதிறற் சூரவாதித்தன்
வரமணமண்டப மடைந்துமன்னிய
வரதநபீடமே லமர்ந்திருந்தனன். (௨0௪)

இளங்கதிருதயமொத் திருந்தநம்பியை
யுளங்கனியன்பொடு முற்றுநோக்கினர்
விளங்குசீர் மண்டப மேயயாவருங்
களங்கமிலுவகையங் கடலுண்மூழ்கினர். (உ0ரு)

ஆரியனுகர்கோ னருகடைந்துநின்
வாரியன்முலையினை வருவியீங்கெனப
பேரியலவன்மட வாரிற்பேசவச்
சீரியமாதர்த் திருவைச்சார்ந்தனர். (உ0சு)

எழுதருமங்கையைப் பீடத்தேற்றியே
செழுவிளாதுவர்நனி திமிர்ந்துதெய்வதங்
தொழுதுதண்கங்கையந் தூயநீர்கொடு
வழுவறவாட்டினர் மகிழ்ந்துமாதரோ. (உ0எ)

பொலிகலையொற்றிமெய் யீரம்போக்கினா
மலிகுழற்ககிற்புகை வாசமூட்டினர்
வலிமுலைச்சந்தொடு வாருமேற்றினர்
மெலியிடைக்கோசிகம் விரித்துடுத்தினர். (உ0அ)

வடிவிழிக்கஞ்சன மெழுதிவான்பிறை
படிநுதற்றிலகமுந் தீட்டிபபன்மலர்க்
கடிநறுமாலையொண் கதுப்பிற்சூழ்ந்துநுண்
டுடியிடையலமரக் கற்புஞ்சூட்டினர். (உ0கூ)

வடிவிழிமடந்தையோர் மறைபடதோர்கில
தொடிவறுகதிர்கள்கோ ளுடுக்கணுறக்
கடிகெழுபன்மணிக் கலனெலாமெடுத்
தடிமுதன்முடிவரை யணிதல்செய்தனர். (உ௧0)

கடிப்பகைசிதறினர் கவின்றழூரல்சால்
கொடிச்சுடாசூழ்ந்துகண் ணெச்சில்கொன்றனர்
தொடிக்கரங்குவித்தனர் தோகையந்லா.
யடிச்சிறுதளிர்பெயர்த் தருள்கவென்றனர். (உகக)

நங்கையும்பைப்பய நடந்துவான்றெடு
மங்கடிமண்டப மணைந்துதாதையைத்
துங்கமாரன்புறத் தொழுதுபோற்றிபபோய்ப்
பொங்குசீர்மன்னவன் புடையிருந்தனள். (உகஉ)

வேறு.

நலமுறந்தணர் நாகர்மன்முன்செலீஇ
யிலகுநீர்நல்கு மோனையிதென்றனு
மலகிலாவுவப போடெழுந்தாத்தியொண்
மலர்கொண்மன்னவன் முன்னாவந்தானரோ. (உகங)

காரவாஙகுழற் காந்திமதிதனைப்
பாரவாஙினக் கீந்தனன்பற்றெனச்
சூரவாதித்தன் கைச்சுடாநர்கர்கோ
னீரவாவி நிறையவொழுக்கினன். (உகச)

வியங்கொள்பல்லிய மேகத்தினூர்த்திட
மயஙகொள்காந்தி மதிதிருக்கந்தாத்
தியங்கொள்வேலவ னேந்தெழிற்கையினு
னயந்கொண்மங்கல நாண்புனைந்தானரோ. (உகரு)

வடிவமங்கையா வாழ்த்தொலிமலகின
நெடியவாசி நிரபபினரந்தணா
படியுமவானும் பிலமுமபரந்தெழு
முடிவில்பேரு வகைக்கடன்மூழ்கின. (உகசு)

மறையுணர்ந்தவர் யாருமருஙகுமொய்த்
துறையுமானெய் சிருக்கினொழுக்கிட
நிறையவுண்டு நிலவுற்றெழுநதது
குறைவிலாதசெந் தீவலஙகொண்டரோ. (உகஎ)

பொன்னிநாடன் புணர்முலைநுண்ணிடைப
பன்னிதாமரைச செஙகரமபற்றியே
துன்னிமேலெழு தீவலஞ்சூழ்ந்தன.
மின்னியம்பல வெங்குமுழஙகவே. (உகஅ)

மங்கைமாரர சாயமணிக்குடக்
கொங்கைவாட்கட் கருங்குழற்கோற்றொடிச்
செங்கைநங்கைதன் சீறடிமென்றளி
ரஙகையாலெடுத் தம்மியிலேற்றினன். (உகக)

கற்புவாய்த்த கனங்குழையார்தொழும்
பொற்புவாய்த்த புணர்முலைகாணுற
வற்புவாய்த்த வருந்ததிகாட்டினன்
வெற்புவாய்த்த திரள்புயவேந்தனே. (உஉ0)

மற்றுஞ்செய்யுஞ் சடங்குவழாவகை
முற்றுஞ்செய்து முகிலுஞ்சமழ்ப்புறப
பற்றுமபொன்மணி யாதிபனவாக்கு
விற்றுஙகபபெரு மானனிவீசினான். (உஉக)

மருவுறுது துணஙகறன்மாய்ந்திடப
பொருவிலாதவா பற்பலாபோந்தெனக்
குருவுலாஞுசெம் மணிகளகொடுத்தன
ஞுருவுலாமுரா கேசன்வரிசையே. (உஉஉ)

துபபுமுற்பல கொடையுந்துகளறச
செபபியார்க்குநல மித்திருநேரிய
னபபுராந்த முலையொடுமமபொன்செ
யொபபுநீஙகு முவளகத்துற்றனன். (உஉந)

மஞ்சடுத்த மணிப்பொற்பரியஙகத்
தஞ்சடுத்த வமளியின்மீமிசைப
பஞசடுத்த பதுந்திருமாதொடும
விஞ்சடுத்தமெயக் கொத்தியன்மேவினான். (உஉச)

பாயநாணம் பனிதநறுவிரைத்
தோயஞ்சாந்த மிலைதுவாக்காயிசை
நேயயாழ்முதல யாவுநிரமபுற
வாயமாதர்க ளாங்குவைத்தேகினார். (உஉரு)

இரதியுஞ்சிலைக் காமனுமென்னநற்
சுரதவிஞ்சை தொடஙகத்துணிந்துதன்
கரதலங்களிற் காரிகைமென்கலை
விரதமன்ன னெகிழ்த்தனனமெல்லவே. (உஉசு)

கணைத்தடஙகட் கருஙகுழற்காரிகை
பணைத்தகொஙகைதன் மாபம்பதிதர
வணைத்துமோந்துமொன் றுவிருமெய்களு
மிணைத்ததொப்ப விறுகத்தழுவினான். (உஉஎ)

தழையுமல்குற் றளையவிழ்த்தாஙகது
குழையமேகலை யோலிடக்கொஙகைமேல
விழையுங்கூருகிர் பாயவிளங்குகா
மழையனான்றுவர் வாயமுதுண்டனன். (உஉஅ)

மாதுபூநகொடி மாமணியல்குன்மென்
போதுமற்றதிற பொஙகுஞ்சுவைநல
மோதுதேனஃ துண்ணுமவணடாயினுன்
கோதுதீரநத குலோததுஙகசோழனே. (உஉகூ)

நாணமாதி புறத்துநடந்திட
வேணவாவினம மெலலியனங்கையும
பேணவாகுநல லின்பமபெருகமெழுச
சேணவாமபுகழச சென்னியோடாடினுன். (உகூ0)

இனையவாறின்ப மெயதியவேந்தல்பால
வனையுமாமுடி மன்னவாயாவரு
நினையுநலவிடை பெற்றனாநீஙகினா
புனையுந்ததம தேயமபுகுநதனா. (உகூக)

கரியவாஙகுழற் காந்திமதியெனபா
ளரியநாயகன் பாலொன்றறைவணின
னுரியமாதுலன் பாலென்றமுளளதோா
பிரியமேவு பெருஞ்சிவலிங்கமே. (உகூஉ)

அனனதுனகை யகபபடிறறேவரு
நினனினமிககவ ரலலாநிருபனே
யென்னவுளளத் திருவியிருந்தனன
மனனாமன்னன வளவாசிகாமணி (உகூகூ)

அனையகாலே யரவிறைசென்னிசாா
மனையடைநதனன் கண்டுமருகனு
நினையுமவானசிறப பனபினிரபபினுன்
புனையுஞ்சேட னிருநதுபுகலுவான. (உகூச)

அடையலாாநடுங காளரிகேணமதி
படையினுேடுவெண பாதலமேவயான
விடையுநலகுதி வேண்டியதுமபுக
றடையிலாதளிப பேனென்றுசாற்றினுன. (உகூடு)

மறறவவாாத்தை செவியிற்புகமகிழ்ந்
தற்றநின்பா லுறைசிவலிஙகத்தை
யிற்றைநாளெனக் கீகுதியென்றனன
கற்றசேடன் கலங்கினனுள்ளமே. (உகூசு)

ஒன்றும்வார்த்தை யுரைத்திலனவ்விடை
நின்றும்போய்த்தன் னெடுமனைபுக்கனன்
பொன்றும்போதத் துறுதுயர்பூண்டன
னென்றுமித்துய ரெய்தியறிந்திலான். (உஙஎ)

மருளின்மூழ்குபு மண்ணிற்கிடந்தனன்
கருளின்வந்த கடுவிடநுங்கியே
பொருளின்வானம் புரந்தபுராதன
னருளின்மேவிய தம்மசிறுதுயில. (உஙஅ)

துன்றுமன்பன் கனவிடைத்தோன்றியே
நன்றிலிங்க மிரண்டுபடுநயந்
தொன்றுநீகொண் மற்றென்றவற்கீகுதி
யென்றுகூறி மறைந்தனனெம்பிரான். (உஙகூ)

பொருந்துமன்பன் விழித்துபொருக்கென
வருந்துமுள்ள மொருவினன்மன்னுதன்
றிருந்திலிங்கந் திகழ்ந்திருபாதியா
யிருந்ததுங்கண் டளவிலின்பெய்தினான். (உச0)

ஆதிநாத னருளைவியந்தொரு
பாதிசென்னிக் களித்தொருபாதியைப
போதுகொண்டுமுன் போலருச்சித்தனன
கோதுதீர்ந்த குணபபுகழ்ச்சேடனே. (உசக)

அன்னபாதி யருட்குறிவாங்கிய
மன்னர்மன்னன் மனைவிக்குக்காட்டினான்
கன்னலஞ்சொலக் காரிகைமாதுமந்
நன்னர்நண்பனுக் கீதுநவிலுவாள் (உசஉ)

வேறு.

தன்னையேநிகர் கயிலையென்றுய்முனஞ் சார்ந்து
பொன்னையேய்சடைப் புராணநாயகனிடத் தமரு
மன்னைதாள்பணிந் தேத்தினண் மகிழ்ந்தனை யாணிற்
கென்னைவேண்டுவ துரைத்தியென்றருளமற் றென்றாய். (உசங)

ஆண்டநாயகி நின்னடிக்கிடையறு வன்பும்
பூண்டவன்பினின் றிருவடியருச்சனை புரியத்
தூண்டுசோதியிற் பொலிசுடர்த்திருவுரு வொன்றும்
வேண்டுநல்குறி னடிச்சியுய்வேனென விண்டாள். (உசச)

அந்தவாசகங் கேட்டலுமென்னையா ளுடையாள்
சந்தமாருள மகிழ்ந்துபேரன்புமுன் றந்து
பந்தமோவுதன் றிருவுருபபாங்கினென் றியற்றிக்
கந்தவோதியென் றுய்கையிற்கொடுத்திது கரையும. (௨௪௫)

கதியளிக்குமிவ் விககிரகத்தைநீ காந்தி
மதியெனபபெயர் புனைந்துமாமறைவிதி வழியே
பதியுமன்பினற் பூசனையியற்றுதி பாவாய்
விதியுமாலுமற் றெய்தருமபேறெலா மேவும. (௨௪௬)

இனையபேரரு ளுருவிலயாமென்று நீஙகாது
நினையமேவுவ மிதுதரிசித்தவர் நினைநதோர
புனையுமாமல ரருச்சனைபுரிநதவா யாரும்
வினையினீஙகுவ ரெண்ணியயாவுமே வுவரால. (௨௪௭)

என்றுவாய்மலர்ந் தருளினள்விடைமகிழ்ந் தெனறுய
நன்றுபோற்றினள் பாதலநண்ணின ளுஙமயா
ளன்றுகூறிய பெயாபுனைந்தருச்சிககு நாளின்
மன்றலார்த்தொடை யாயெனைவயிறுவாய்த் தனளே. (௨௪௮)

எனக்குமபபெய ரிட்டனளன்பினிவ விலிங்கந்
தனக்குமன்றவப பனையுருத்தகுதியாங கிடைபபின்
மனக்குநோந்தவோ ரிடத்துறத்தாபித்து வணஙகிக்
கனக்குநற்கதி யடையலாமென்றுகட் டுரைததாள. (௨௪௯)

வருமுலைக்கொடி வாரத்தைகேட்டுளநனி மகிழ்ந்து
மருமலாக்குழா லன்னதுபெறத்தகும் வழிநீ
கருதிவாஙகுறி னுண்டெனக்கரைந்தனன் காரோ
நிருபனஙஙனஞ் செய்வதற்கணங்குநேர்ந்தனளே. (௨௫0)

அன்னைபாலனடைந் தடிபணிந்தனளெடுத் தணைத்தா
ளென்னவேண்டுவ துனக்கினிதிசைத்திடு கென்றாள்
பின்னையானென்றும் வேண்டிலன்பேரரு ளன்னைய
தன்னைநேர்பனை யுருவினைத்தருதிநீ யென்றாள். (௨௫௧)

சிறிதுபோதுளத் தெண்ணினடேமொழி மடந்தை
பிறிதுவேண்டிலாப் பேரறிவினுக்குள மகிழ்நதா
ணறியபூஙகுழா னயந்தனைகோடியா லென்றே
யறிவினுடரும் பனைதிருவுருவெடுத் தளித்தாள். (௨௫௨)

வாங்கிககண்ணுற வொற்றினள்சென்னியின் வைத்தா
ணீங்கிக்காதலன் றிருககையிற்பறையுரு நீட்ட
வோங்கிபபொாகுபே ரன்பினுன்வாஙகியுள் ளுவநதா
னேங்கிச்சாமபுநுண் ணிடையினுள்பின்னுமீ நியற்றும. (உ௫௩)

தெருளின்மேவிய நாயகன்செங்கையிற் றன்பா
லருளின்மேவிய வாய்மணியிலிங்கமோ ரைந்தும
பொருளின்மேவிய பெருமையவெனபபுகன றளித்தாள்
கருளின்மேவிய கனநகுழன்மடந்தையக காலே. (உ௫௪)

அரவநாயகன் வளவர்கோனருளவிடை பெற்றான்
பரவுகேளொடு பாதலமபுகுந்தன னிருநதா
னிரவுநோகுழன் மாதொடுமின்புமுற் றிருக்கு
முரவுசாலபுயத் தாருடையனையன்மற் றொருநாள். (உ௫௫)

வேறு.

தன்பாலிருக்குஞசிவலிஙக மாறுமனேவிதனேயினற
மின்பானின்றுமவந்தபரா பரைதன்விளஙகுதிருவுருவு
மின்பாலயஞ்செயதநிற்குபித தென்றுமவணஙகியேததெடுபப
வன்பாலுள்ளத்தெண்ணினு னரசனற்றைநாளிரவில. (உ௫௬)

தூயவிலிஙகமோராறு மொனறேயாகிசசுருமபிசைககும
பாயமலர்விலவாரணியம் படாநதோாவிலவமுதன்முளைத்து
நேயமிகமேலெழுந்தாறபோ லிருந்தநிலவுபரையுருவு
மாயவொருபாலுறைநததுவின் றேயுலாமதிசயிபப. (உ௫௭)

வழிநாள்வளவன்பரையுருவோ டிலிஙகமவைத்தவறைதிறந்து
கழியாதரவினேக்கினுன் கண்டானலலன்கலஙகினுன்
விழியாருவிபொழிதரநெட் டுயிர்பபுவியஙகவிமமுவா
னெழியாதெழுந்தவரூாககடறகோர புணைநானுமலுயஙகுவான். ()

னென்னற்பொழிததவிலசினையுஞ சிதையாதிருக்கநெடியகொடும
பன்னற்கரியவககாட்டும புறமாாகாபபுமபடாந்திருகக
வென்னற்கருணைக்குறிகளகவாந தேருவாருமுளாகொல்லோ [ன்.
வின்னற்றமியேன்பிழையுணாநதேயிரிந்தவாமென்றுளஙகொண்டா

மன்றுளாடுமாமணியே வானத்தவாகள்போரேறே
நன்றுள்வார்தமகத்தொளியே நாளுந்தழையுங்கற்பகமே
மின்றுள்வானீர்மழைபெயல்போற் கருணைமழைபெய்மேகமே
மின்றுளறியபபிழைத்திலே னெஙகுற்றாயோவிரஙகாயே. (உ௬௰)

பொன்னோவென்னுந்திருமேனித் தேவேபுலவர்சிங்கமே
மின்னோவென்னுஞ்செஞ்சடையாய் வேயார்தோளியொருபாகா
முன்னோடொழியும்பின்னோர்த முள்ளத்தொளியாமுழுமுதலே
யென்னோசிறியேன்பிழைத்துளே னெங்குற்றாயோவிரங்காயே.

நந்தாவொளியேசுவைத்தேனே நாடற்கரியாய்திருமாலும்
பந்தார்முலையாளொருபாகா பைவாளரவப்பணியானே
வந்தாயருளுற்றடியேன்பான் மறைந்தாயிதுவுமெனமாய
மெந்தாய்சிறியேனென்பிழைத்தே னெங்குற்றாயோவிரங்காயே.

பாறார்சூலப்படையாய்வான் பரவுங்கங்கைச்சடையாய்வெண்
ணீறார்மேனிப்பெருந்தகையே நெடியோனறியாநின்மலனே
மாறாரசுரர்புரம்பொடித்தாய் வானம்புரந்தமணிகண்டா
வேறார்கொடியாயென்பிழைத்தே னெங்குற்றாயோவிரங்காயே.

விடையாய்ச்சுமக்கவல்லானோ விழிசூன்றடியினிடுவானோ
புடையாயுமையென்றுறைவானோ புரங்கொல்வதற்கம்பாவானோ
கடையானிவனென்றெனைநினைந்தோ கைவிட்டனைகட்செவிசூழ்
விடையாய்சிறியேனாலு மிரங்கவேண்டுமினித்தானே. [ந்த

மறையின்முடியோபேரன்பர் மனமோமேலைச்சிவபுரமோ
நிறையுங்கருணைப்பிராட்டியொடுமெங்குற்றாய்நின்மலனேயென்
றறையுமரற்றுமேங்கும்விழுந் தயருமுயிர்ககுமொருமிடியன்
குறைவினிதியம்பெற்றிழப்பி னுறுவதுற்றான்கொற்றவனே. ()

இன்னவுரைத்துநனிபுலம்பு மளவிற்காந்திமதியென்பாண்
மன்னர்மன்னன்பாலடைந்தா ளுற்றதுணர்ந்துமயங்கினா
ளன்னகாலையமைச்சர்முத லாயபலருமாங்குற்றா
ரின்னல்வேலைமூழ்கினா ரவனைநோக்கியிறையிசைக்கும். (உகூகூ)

கண்ணுமுயிருமெனக்கானீர் கருணைப்பெருமான்குறிகளோ
டண்ணுமமலைதிருவுருவு மறைந்தமாயமறிந்திலே
னுண்ணும்படிசெந்தழலுடலை யுதவிலேன்வாளகொடுபோழே
னெண்ணும்படியாண்டரசுசெயவிசைபூண்டேனிருக்கின்றேன்

நெறியையிழந்துங்குலமிழந்து நீதியிழந்துமரசிழந்தும்
பறியையிழந்துந்திருவிழந்தும் பார்வையிழந்தும்பண்பிழந்தும்
பொறியையிழந்தும்வாழ்தலுமாம் போற்றுங்கருணைப்பரமனரு
குறியையிழந்துவாழ்வாரு முளரோவுலகிற்கூறீரோ.

நல்லார்யாருமடியார்போ னடிக்குங்கள்வனிவனென்று
சொல்லாநிற்பர்நீதிவழீஇ நின்றானதனாற்சுடர்க்குறிக
ளெல்லாமகன்றுபோயினவா லென்றுமிசைப்பலென்செய்கேன்
கல்லாமனத்துக்கடையனே னடைந்தபேறுகண்டோ. (உசுகூ)

பழியுமுடலுமொருங்கியான் பரிக்கமாட்டேன்மாட்டேனென்
றழியுமிறைவன்றுணிவையுணர்ந் தயர்ந்தார்யாருமப்பொழுது
வழியுநறவமலர்வில்வ வனத்துவாழும்பெருமானார்
பொழியுமருளாலெதிரோங்கின் றிருத்தோற்றமற்புகலுவார். ()

வாராய்புகழ்சால்வளவர்குல மணியேதணியாப்பேரன்பி
னீராய்நின்னையகன்றியா நீங்கேநீங்கேமெஞ்ஞான்றும்
பாராய்தருசீர்வில்வவனப் பளகில்பெருமையுணர்ந்திலா [ய்.
யாராய்தருவேறிடங்கோயி லமைத்துப்பதிட்டைசெயநினைந்தா

உள்ளத்ததனையுணர்ந்துபுக ழோங்கும்வில்வவனம்புகுந்தே
யெள்ளற்கரியவாறுருவா யிருந்தநாமோருருவாகித்
தள்ளற்கரியமாலூரத் தருவின்மீழமிருக்கின்றாம்
விள்ளற்கரியவத்தான நாளுமெமக்குமிகுவிருப்பாம். (உஎஉ)

முன்னரிருந்தபடியெல்லா மூரியுலகமுணர்ந்துய்யப்
பன்னற்கருஞ்சீர்நிறமைந்தும் பாதியுருவுங்கொண்டிருந்தாங்
கன்னற்குதலையந்தீஞ்சொற் காந்திமதியுங்குடைந்தோர்த
மின்னற்பகையாஞ்சிவதீர்த்தத் தெதிரேவிளங்கியிருக்கின்றாள்.

இன்னுங்கேட்டிநின்போலன் புடையார்காணவெஞ்ஞான்று
மன்னும்புலரியரதநமாய் வயங்கும்பகலிற்படிகமாய்
முன்னுமாலைக்கனகமாய் முதல்யாமத்துவயிரமாய்த்
துன்னுநடுயாமத்தெல்லா நிறமுமாகித்துலங்குறுவேம். (உஎச)

கற்பிற்பொலிநின்மனைவியொடும் வந்துகாண்டிகருதியவா
றற்பிற்பொலியாலயமாதி யாவுமமைத்தியென்றையர் [தான்
பொற்பிற்பொலிவாய்மலர்ந்தருளக் கேட்டான்றொழுதான்பூரித்
வெற்பிற்பொலிதோணீர்நாடன் வேறுளாருமனமகிழ்ந்தார். ()

மனையாள்சிவிகையூர்ந்துவர மற்றையோர்பின்றொடர்ந்துவர
நனையாரலங்கலிறையவணின் றெழுந்துநடந்துவிரைந்தேகிச்
சினையார்வில்வவனம்புகுந்தான் றேடியயன்மால்காணுதான்
றனையாதரவிற்கண்ணுற்றான்றடங்கைகூப்பித்தாழ்ந்தெழுந்தான்

உற்றார்பிரிதற்கரியானை யொளிரைவண்ணப்பெரியானைக்
கற்றார்கலங்கத்தரியானை நோக்கிநோக்கிக்களிசிறந்தான்
பொற்றாரணிந்தபுயவளவன் பூவையானுமென்பதியு [ள்.
நற்றாரணியுய்ந்தனமென்றுநவின்றுள்ளுருகித்தொழுதெழுந்தா

பொலியுங்காந்திமதியுமைபாற் போந்துளுருகிப்பணிந்தெழுந்து
மலியுநகருணையன்னுயெம் பெருமானுடனவந்தனைநீயு
மெலியுமெஙகண்முகம்பாரா விதந்தாளென்னென்றன்புடனூர்
கலியும்பொருவாவருள்வேந்துங் காந்திமதியுந்துதித்தனரால். ()

பெருகுமன்பிற்பணிந்தெழுந்தான் பிரியாவிடைபெற்றுங்ககன்று
கருகுங்கூந்தற்றேவியுநூல் கற்றவமைச்சர்முதலோரு
மருகுசூழநடந்தேகி யரசன்றிருமாளிகைபுகுந்தான்
குருகுபுனைவாயுணரொன்றான் கோதிறவத்துககாசிபனே.(உஎகூ)

அன்றுசூரவாதித்தன் கதையினீவிரறியலா
நன்றுநிறைமைந்தெம்பெருமான் முனிக்குத்தெரித்தநலமென்று
மின்றுதேர்மின்முனிவர்கா ளினையகாதைகறறுணர்ந்தோர்
முன்றுணிறைந்தானருள்பெறுவ ரொன்றுநவின்றான்வளர்சூதன்.

சூரவாதிததப்படல முறறிறறு.
ஆகததிருவிருததம கoகடு

## திருவிழாப்படலம்.

யாவர்தநாம மிசைத்திடவல்ல
நாவரனூரு ணயந்துறையையா
மூவர்பராவ முதாயவைவண்ணத்
தேவர்விழாவுறு சீர்மைதெரிப்பாம். (க)

விதுமுகவாள்விழி வேய்புரைமென்றோண்
மதுமலரோதியங் கத்துருமங்கை
சதுமுகனோவரு மாமுனிதாண்மென்
பதுமமலர்த்துணை பற்றிவணங்கா. (உ)

திருவுறையூரமர் செம்மலுதங்கற்
கருமைசெய்காலமோ ரைந்தினுமைந்து
மருவுநிறங்க டெரித்தருண்மாண்பிற்
கொருவருமேது வுணர்த்தினைமாதோ. (ங)

இக்கதைகேட்ப விகற்பிணிவார்தை
யுக்கதுபண்டை விளக்கமதுற்றேன்
செக்கர்கொள்வான்பிறை செஞ்சடைவைத்த
வக்கரவப்பணி யாரருள்பெற்றேன். (ச)

நன்னர்மனைக்க ணடைந்தநரேந்திரன்
பின்னரியற்றிய தியாதுபிறங்க
வின்னருளுற்ற திசைத்திடுகென்றுள்
பன்னருமெய்ப்புகழ் மாமுனிபன்னும். (ரு)

வேறு.

நன்செய்சூழ்புன னாட்டிறை
கொன்செயமந்திரர் கூவியே
மின்செய்வேணி விமலருக்
கின்செய்கோயி லியற்றிட. (சு)

அறைதிறந்துநம் மருநிதி
குறைவில்கம்மியர்க் கூவியே
நிறையவீசுமி னீள்வினை
யிறைமற்றோருக்கு மீயுமின். (எ)

ஏற்றயானையு மீட்டுமின்
போற்றுகானமும் போக்குவித்
தாற்றவலவிரைந் தாக்குமின்
சீற்றமோவிய செய்கையீர். (அ)

என்றுசென்னி யியம்பலு
நன்றுநன்றென் றிறைஞ்சிநா
லொன்றுகேள்வி புணர்ச்சியோ
ரன்றுமூண்டன ரத்தொழில். (சு)

ஆய்ந்தசெய்வினை யாளர்பால்
வாய்ந்தசெம்பொன் வழங்கினு
ரேய்ந்தமற்றவ ரேகிவான்
றோய்ந்தகானந் தொலைத்தனர். (கo)

வேறு.

நிலந்திருத்தினர் மதின்முதற்பலவடி நிலையும்
வலந்தரப்புவி போழ்ந்துநுண் மணலறல்பெய்து
குலந்தழைத்ததோற் கானிகர்குற்றிகொண் டிடித்துக்
கலந்தவன்கணார் மனநிகர்த்திறுகுறக் கண்டார். (கக)

கல்லடித்துமே லடுக்குநரோர்சிலர் கருப்பி
னல்லகட்டிநீர் கரைக்குநரோர்சிலர் நையச
சொல்லருஞ்சுதை யரைக்குநரோர்சிலர் துணிந்து
வல்லவிட்டிகை யியற்றுநரோர்சிலர் மாதோ. (கஉ)

தூணமுத்திரம் போதிகைகொடுங்கைநுண் டொழிலின்
மாணவாக்குந ரோர்சிலர்வரைபல தகாத்துக்
காணமீமிசைப் பரப்புகலொடுவரிக் கல்லும்
பூணவாக்குந ரோர்சிலர்தொழில்புரி வாருள். (கங)

பண்டியேற்றினர் கொடுவருவார்சிலர் பற்றி
மண்டிமற்றவை யிறகிடுவார்சிலர் வன்மைத்
தண்டின்மேலெழ வெழுபபிடுவார்சிலர் தாங்கிக்
கொண்டியற்பட நிறுத்திடுவார்சிலர் குறிகல். (கச)

தேக்குமுற்றரு வறுப்பவரோர்சிலர் தீங்கு
போக்குதிண்கத வாக்குநரோர்சிலர் புலிங்கந்
தாக்குவல்லிரும் படிப்பவரோர்சிலர் தடங்கை
யூக்குகூரல்கொண் டச்சுறவுரப்புவார் சிலரே. (கரு)

அண்டர்கைதொழு விமானமாமண்டப மத்த
மண்டபம்புனை நிருத்தமண்டபமகச் சாலே
கொண்டல்கண்படு திருவிழாமண்டபங் குலவு
பண்டமேவலங் காரமண்டபமடைப் பள்ளி. (கசு)

கண்ணளாவிய காந்திசேர்மதிப்பெயர்க் கௌரிப்
பெண்ணளாவிய கருணையினுறைபெருங் கோயில்
விண்ணளாவிய கோபுரம்வெளிமதில் விளங்கு
மண்ணளாவிய வுண்மதிலடுக்குமண் டபங்கள். (கஎ)

ஏர்கொளீங்கர ஞதிதண்டீசனே யீருச்
சீர்கொள்சூழுறை தேவராலயஞ்செழும் பொற்பூண்
பேர்கொள்பன்மணிப் பூணமைத்திடுபிறங் கறைகள்
வார்கொள்வாகன மண்டபமற்றும்பல் லறைகள். (கஅ)

மேவுமாயிரக் காலுடைமண்டபம் விண்டோய்
பாவுநூற்றுக்கான் மண்டபமாதியாப் பகரும்
யாவும்யாவரு மதிசயித்துறுகளி யுறவா
சோவுசிற்பநூல் வழியமைத்தாருமு தொழிலோர். (கசு)

வந்துசூரவா தித்தனுமதிசய மருவ
நந்துமோகையிற் றிருப்பணிநலமெலா நோக்கி
முந்துபொன்மணி யாடையாதிகள்பல முகந்தாங்
குந்துமன்பின்வீ சினன்றபதியாமுத லோர்க்கு. (௨௦)

சுந்தரந்திக ழைங்கரன்குமரவேள் சோமாக்
கந்தர்சந்திர சேகரர்நடனவில் கழலார்
சந்தமென்முலை யம்மைதண்டீசர்முற சாற்று
மந்தமில்லவர் யாவருந்திருவுரு வமைந்தார். (௨௧)

சொலலரும்புகழ்ச சூரவாதவனெனுஞ் சோழ
னல்லதூபககா றீபக்கானகுமணி விளக்கம்
புல்லுதண்டுபொற குடநகரகம்பொலி கலச
மொல்லும்வட்டகை மற்றவுமுஞற்றுவித் தனனே. (௨௨)

ஆதிசைவணா மற்றகம்படித்தொழி லாளா
நீதியாலழைத் தளவறுதிருவொடு நிறுவிக்
கோதிலாமறை யாகமவிதிப்படி குலவத்
தீதில்கும்பநீ ராட்டுவித்தனன்றிகழ் நாளில். (௨௩)

பொருவில்பாடலு மாடலும்வழாவகை பொலியப்
பெருகுகாதலி னுலகுதாழ்ந்துறுகளி பெருக
வருள்விராவுறு மூன்றுறுப்புங்குறை யாமன்
மருவபூசனை நடத்துவித்தனன்கதிர மருமான். (௨௪)

கதிருழக்குநெற் கதிகமாவிளைகழ னிகளு
முதிர்சுவைப்பல கனியுடைசசோலையு முழுவா
னதிர்தரக்குளி றுங்களிற்றியானையு மாடற்
கெதிரில்வாசியும் பசுக்களுமெண்ணற வளித்தான். (௨௫)

தவவிளங்குமா மணிமுடிகுண்டலந் தவாவா
குவலயம்பதக் கங்கபாய்கங்கணங் குலவு
பவளநித்தில மாணிககமாலைமுற் பலவுஞ்
சிவபிரானுக்கு மம்மைக்குஞ்செய்வித்துச் சேர்த்தான். (௨௬)

தெய்வமால்விடை வாம்பரிகுஞ்சரஞ் சிவிகை
மைவிராவுமூ டிகமனஞ்சுகம்பெரு வையம்
பைவிராவுவாய் மயின்முதலூர்திகள் பலவுங்
கைவலாளாக்கொண் டமைத்தனன்கதிர்க்குலக் காளை. (௨௭)

ஆலவட்டமு மலங்குசாந்தாற்றியு மம்பொற்
கோலவட்டவொண் கவிகையுங்குலவுசா மரையு
ஞாலவட்டமேத் தெடுக்குமற்றுள்ளவு நயந்து
சாலவட்டமூர்த் திக்கினிதியற்றுவித் தனனே. (உஅ)

எம்மையாளுடை யிறையவணிலங்குசந் நிதியும்
வெம்மைதீர்த்தருள் பராபரைமேவுசந் நிதியு
மும்மையாமூல கத்துளார்முறைவந்து மொய்ப்பச்
செம்மைவாய்ந்துமெய்ச் செல்வத்திற்பொலிந்தன சிறந்தே. ()

மருவுபத்தியே யுருவமாகியகதிர் மருமான்
பொருவில்பஞ்சவர் னேசர்க்கும்பொய்யினே னுளத்து
மொருவுறுததாட் காந்திசேர்மதிப்பெய ருமைக்குந்
திருவிழாச்செய வெண்ணினுன்சிந்தையுண் மாதோ. (௩0)

சிவபிரானுறை யூரமர்தெய்வநா யகனுக்
குவமையில்லதோர் திப்பியமகோற்சவத் திருநா
ளிவருமாசையிற் சேவிக்கவம்மின்க ளென்று
புவனமன்னவர் யாவர்க்குந்திருமுகம் போக்கி. (௩க)

கொடியமாடவீ திகடொறுந்தோரணங் குலவ
நெடியவாழையுங் கன்னலுங்கந்தியு நிரம்பப்
படியயாத்திடு மின்சுடர்பலவமைத் திடுமின்
முடியவிக்கணத் தெனநகர்மாந்தர்க்கு மொழிந்து. (௩உ)

புனிதநாயகன் றிருவிழாச்சிறப்பிற்குப் புகலு
மினியவாமுப கரணங்கள்யாவையு மீட்டிக்
கனிவின்வைகுநாள் வானவர்முனிவரர் கணங்க
ளனிகமன்னவர் யாவருமாங்கடைந் தனரே. (௩௩)

யாருமெய்திட மகிழ்ந்திறையாலய மடைந்து
பாரும்விண்ணுமேத் தைவண்ணப்பிரானடி பணிந்து
தேருநாயகர்க் கினிதபிடேகமுஞ் செய்வித்
தேருலாமர தநவணியெடுத்தணி வித்து. (௩௪)

இன்பநல்கிவ ரரதநாயக ரேயென்
முன்புமல்கவோர் மனுவெனுந்திருப்பெய ரறைந்து
நன்புகழ்ச்சிசால் விடையெழுதாடையை நயந்து
துன்பறத்திரு நகர்வலஞ்செய்வித்தான் சோழன் (௩ரு)

பாயுமால்விடைத் திங்களின்மதிவளர் பக்கத்
தேயும்வான்றிதி யாதினெண்பல்லிய மியம்பக்
காயுந்தீவினைத் தொண்டர்கள்களிசிறந் தார்ப்ப
வாயுமன்னன்வெள் விடைக்கொடியேற்றுவித் தனனால். (கூசு)

திருந்துபல்சுவைக் கறியமுதொடுதிரு வமுது
மருந்துநேர்கலா தென்றிருவிலாப்புடை வயங்க
வருந்துமாறுபல் லந்தணர்முதலியோர்க் களித்துப்
பருந்துசூழ்புலால் வேலினனுபாகடை நல்கி. (கூஎ)

கதிசெய்மங்கலப் பிள்ளையுமிளவலுங் காந்தி
மதியுமாபுகழ் வாய்ந்ததண்டீசனும் வானப்
பதியர்போற்றிடு சிறப்பொடுமுடன்வரப் பரவு
சதிரருட்டிரு வரதநாயகர் தம்மை. (கூஅ)

மறைமுழங்கசுல் வாழ்த்தொலிமல்கமா லயனுக்
கிறைவனவந்தன னெனத்திருச்சின்னநன் கியம்ப
வறைகடற்புவி யடங்கலுமரகர வென்ன
நிறையுமாப்புகழ் நகர்வலஞ்செய்வித்தா னிருபன். (கூகூ)

மன்னுசத்தமி யிற்பொலிகற்பக மருவிப்
பன்னுநாயக ரம்மைமுன்னால்வரும் படரத்
துன்னுமாநகர் மணிமறுகிடைவலஞ் சூழ்ந்தார்
பொன்னுமாமணி யுங்கதிர்க்குலமகன் பொழிய. (சுO)

ஓதநஞ்சமுண் டும்பரைப்புரந்தவ ருடனே
மாதர்மைந்தர்க டமக்கியையூர்திமேல் வரவான்
சீதமாமலர் பொழியவட்டமித்தினங் குறுத்தாட்
பூதமேறிவந் தளித்தனர்காட்சிவான் புவிக்கு. (சுக)

மயிலைநேரியன் மங்கையுமாமுகத் தேவு
மயிலையேந்துகைச் சாமியுஞ்சேய்ஞலூ ரரசு
மெயிலைவீதியூர் தியின்வரவெங்கணு யகர்வான்
கயிலையேறிவந் தளித்தனர்நவமியிற் காட்சி. (சுஉ)

உடைதிரைக்கட லொத்தியமொலிப்பவூர் திகளூர்
விடைமலைக்கொடி மைந்தர்களுகைத்தினி தெய்தச்
சடைமுடித்தநம் மரதநநாயகர் தடாவெள்
விடையுகைத்தனர் தசமியில்யாவரும் விரும்பு (சுங)

ஏலவார்குழ லம்மைபொற்சிவிகைமே லெய்த
ஞாலமேத்துதம் மூர்திமும்மைந்தரு நடாத்தக்
காலகாலர்குஞ் சரமுகைத்தனர்கலி யாணக்
கோலமேவியே காதசித்தினநலங் குலவ. (சுசு)

தந்தியாளிமுன் வானவர்யாவருந் தாழப்
புந்திமேவுமை முதலியோர்களுமுடன் போத
வந்திவான்மதி மிலைச்சியசெழுசடை யழகர்
நந்திமீதிவர்ந் துலவினர்துவாதசி நாளில். (சுரு)

புங்கவூர்திமே லுமைமுதனல்வரும் போதப்
பங்கமோவிய மறுகிடைப்பாய்பரி யுகைத்தா
ரங்கண்ஞாலமும் வானமுமகங்களி துளும்பத்
திங்கள்வேணியர் செழுந்திரையோதசித் தினத்தில். (சுசா)

அன்றுவைகறை நறுந்திருமஞ்சன மாட்டித்
துன்றுபொற்கலை யுடுத்தியொண்சுடர்மணி யணிக
ளென்றுபல்லவு மணிந்துநாயகர்முத லோரை
யொன்றுபீடத் தேற்றினர்சதுர்த்தசித்தின வுதயம். (சுஎ)

வேறு.

மாயவன்பிரமன்வான மன்னவனுதியெண்மர்
பாயசீர்வசுக்கள்செங்கேழ்ப் பரிதிவான்மதியியக்கர்
தூயகந்திருவர்வித்தி யாதரர்சுரரொண்சித்தர்
நேயமாதவர்கள்பூத ராதியர்நெருங்கிமொய்ப்ப. (சுஅ)

அணிமுலையரம்பைமாத ரழகொழுகுரகமாதர்
மணிநகைவயங்கேழ்மாதர் மானிடமாதராதிப்
பணிபுனைமாதர்பல்லோர் படரொளிமண்டபத்துந்
திணிசுடர்மறுகிடத்து நின்றுதஞ்செங்கைகூப்ப. (சுகூ)

குடமுழாமுழவந்தாளந் கொக்கரைதடாரிமொந்தை
படகமொண்சங்கந்தக்கை பகர்தருதகுணிபேரி
தடமலிமுருடுவீணை சல்லரிகுழல்யாழின்ன
கடலொடுமுகிலுநாணங் கைக்கொளமுழக்கஞ்செய்ய. (ரு0)

வேயுமாமதியோன்வந்தான் வில்வவனேசன்வந்தான்
பாயுமால்விடையோன்வந்தான் பஞ்சவர்னேசன்வந்தா
ளுயுமாபுகழ்சால்காந்தி மதியுணரழகன்வந்தா
னேயுமாதேவன்வந்தா னென்றுசின்னங்களூத. (ருக)

மருவியபாடற்பண்பு மனைமலர்க்கையிற்காட்டிப்
பொருவறுவதனபபோதிற் பொருவிழிக்கயலுலாவ
வொருவறுசதியினோர வொளிரடிபெயர்த்துவைத்துக்
குருமலர்நிறையப்பூத்த கொம்பனார்நடனஞ்செய்ய. (ருஉ)

பிறைமருப்பொருத்தல்வாவும் பரிகண்முன்பெயர்ந்துசெல்ல
நிறைமதியனையநீர்மை நித்திலககுடைநிழற்றக்
கறையில்பொற்கவரிவீசக் கச்சமிறீபமொய்ப்ப
விறைவராதியரைத்தாங்கி யேகினார்மறைவல்லோர்கள். (ருங)

ஆயபொன்மலைநேர்வைய மைந்தினுமருள்சாறெய்வ
நாயகர்முதலியோரை யேற்றினாநயந்துமுந்தித்
தேயமன்னவர்முன்யாருஞ் செங்கையின்வடந்தொட்டார்கண்
மேயதேனைந்துமெல்ல நடந்தனவீதியூடே. (ருச)

திருமணித்தேரிற்றோன்றுந் தெய்வநாயகனைநோக்கிக்
குருமணிப்பணிபூண்கொங்கைக் கொவ்வைவாய்ச்செவ்விமாத
ரருமணிச்செங்கைகூப்பி யளவறுகாதல்கொண்டாங்
குருமணிகுயிற்றிச்செய்த வோவியமொப்பநின்றார். (ருரு)

துணைமுலைசுமக்கலாற்றாச் சுருங்குநுண்ணுசுப்போர்மங்கை
பணைமருள்பசுந்தோட்டோழி பங்கயவதனநோக்கி
யணையுமற்றிவர்தோண்மாலை யளிப்பரோவென்றாளன்னா
ளிணையிலீன்றானை நீயுங் கொன்றிடிலீவரென்றாள். (ருசு)

மலங்குபூங்கொம்புபோல்வா ளொருத்தியோர்மாதைநோக்கி
யலங்குபொற்றேரிற்றோன்று மாண்டநாயகனைக்கண்டேன்
றுலங்குமற்றவனைவண்ணத் தொன்றெனச்சொல்லுஞ்செம்பொ
னலங்கிளர்வண்ணம்பெற்றே னென்னிதுநவிறியென்றாள். (ருஎ)

மாலுடையொருத்திமற்றோர் மடந்தையைநோக்கியும்ம
பாலுடையொருத்திதீராப் பசப்பினளென்னில்விண்டுக்
கோலுடையிவனைக்கண்ட நமக்கெவன்கூடுமென்றாள்
சேலுடைவிழியன்னாளு முள்ளதேதெரித்தாயென்றாள். (ருஅ)

மடத்தகையணங்கோர்மாது மற்றொருமாதைநோக்கி
யிடத்தொருபெண்ணிலாரோ லெண்ணியதெளிதாமென்றாள்
குடத்தனவவளுமைய ரிடத்துமின்கொண்டிலாரோற்
கடற்கருவிழியர்யார்க்குங் காமமுமின்றேயென்றாள். (ருகூ)

நண்ணியவழகரோயுண் ணயந்திடுமடியரானு
ரொண்ணியவெண்ணியாங்கே யளிப்பவரொன்றுநும்மைப் [ங்
புண்ணியருரைத்தலெல்லாம் பொய்மையோபொருந்தெனுள்ள
கண்ணியதளித்தச்சொல்லேப் புதுக்குமென்றனளோர்கன்னி. ()

தோழியைநோக்கிவேற்கட் டுடியிடையோர்மடந்தை
யாழியிவ்வையநசசு மழகரொனல்குல்வையம்
வாழிநச்சுவரோவென்று ளவளுநினல்குல்வையம்
வீழிவாய்மடந்தாய்மெய்யே னச்சுதன்மெய்யேயென்றாள். (சுக)

பணக்கோலவல்குலாளோர் பாவைதோழியைப்பார்த்தென்னை
மணக்கோலஞ்செய்வரோமற் றிவரொன்றாளவளுமாதே
யணக்கோலமறைக்குமெட்டா ராற்றுவார்கொல்லோவண்டுக்
குணக்கோலமாரவேளே யதுசெயுங்குறிக்கொளென்றாள். (சுஉ)

மடக்கொடியொருத்திமற்றோர் மங்கையைநோக்கியென்னிப்
படக்கலமுடையாரென்னை வலக்கணுனோக்கப்பார்த்தே
னடக்கரும்வெப்பமேனி யாயினதென்றாளன்னு
ளிடக்கணுனோக்கின்முற்றுங் குளிருமாமின்பமென்றாள். (சுந)

யாருமேத்துறந்தைமேய வழகரேசடைமேற்கங்கை
நீரும்வான்மதியுஞ்சூடு நிமலரோநெடியபொற்றே
ரூருநாயகரோயென்னீ தும்மைவந்தடைந்துமாலேச்
சேருதன்முறையோவென்றாள் சிறுநுசுப்பொருபூங்கோதை. ()

கையமராழிதம்மி னென்றுகண்ணீர்பெயர்த்து
மையர்நம்முறந்தைவாணர் தந்திலராயுந்தோழி
செய்வதென்னென்றாளாங்கோர் திருவனாளவணீர்மட்டோ
மைவருகண்ணும்பேர்க்கிற் றருகுவர்மறையாரென்றாள். (சுடு)

தோன்றமேலெழுகுயத்தோர் தோகையோர்மாதைநோக்கிச்
சான்றவர்புகழுமிந்தத் தனிமுதற்பிரானுரென்னை
யான்றநன்மணஞ்செய்வாரோ வென்றனளவளுமுன்னை
யீன்றவன்வரைக்குவேந்தோ வழுதியோவியம்பாயென்றாள். ()

வையமேற்பொலியுமெங்கள் மாதேவர்முன்புசென்றோர்
தையல்கைகுவித்துநின்று சாமிநீகருணையால்வந்
துய்யவெற்புணரினஃதே போதுமற்றொருவர்போலுன்
மெய்யினிற்பாதிவேண்டேன் விதுவென்விண்ணப்பமென்றாள். ()

கள்ளுலாமலங்கலோதிக் காரிகையொருத்திபொற்றே
ருள்ளுலாமழகியார்முன் சென்றனளுரைக்கலுற்றாள்
வள்ளுலாமழுவீர்காந்தி மதியெனும்பெயரோவைத்துக்
கொள்ளுவேன்பசப்புமுள்ளேன் கூடுறத்தடையென்னென்றாள்

பாலறிகுதலையாளோர் பாவையோர்கொடியைநோக்கிச
சேலறிவிழியாய்காமத் திறமொழியேற்றிலாரிவ்
வாலறிவுடையரொன்னே யென்றனண்மற்றங்காரு
மாலறியாருக்கிந்த வார்த்தையேற்றிடுமோவென்றாள். (சுசு)

சந்துவாழ்முலையினாளோர் தாழ்குழற்றையலைய
ருந்துதேர்முன்னர்சசென்றுங்குறைப்பணமற்றெனக்கெங்கேனு
பந்துநேர்முலையினருட் பகையுளாரில்லையென்பால் [ம்
வந்துநீர்மருவிற்காந்தி மதிகவெருரைப்பாரொன்றாள். (எ0)

நிறையெழிலுடையவையர் நெற்றிநீற்றெழில்பாரீர்வெண்
பிறையெழில்பாரீர்திண்டோட பேரொழில்பாரீகண்டக்
கறையெழில்பாரீர்வீரக கழலெழில்பாரீர்கொன்றை
நறையொழுகலங்கன்மார்பி னலலெழில்பாரீரொன்பார். (எக)

நாவலந்தீவமொன்றே நற்றவமுடையதென்பார்
மேவருநீர்நாடொன்றே விண்ணினுஞ்சிறந்ததென்பார்
தாவருமூறையூரொன்றே தனக்கிணையிலாததென்பார்
யாவரோபுகழாதாரித் திருவிழாவணியையென்பார். (எஉ)

மருமலர்க்கூந்தற்காந்தி மதிமணவாளற்போற்றார்
பொருவறுசென்னிசெய்த வாலயம்புக்குச்சூழார்
கருதுறுசிவப்பேர்தீர்த்தங் குடைந்திடார்கனிவின்வந்திப்
பெருவிழாச்சேவைசெய்யார் பிறப்பென்னபிறப்போவென்பார்

இன்னனவுரைத்துமாதர் மொய்த்திடயாருமேத்த
மன்னவன்சூரபானு மகிழ்ந்துகைதலைமேற்கூப்ப
நன்னலமளிக்குமையர் நயந்துறைதருபொற்றிண்டே
ரன்னிலைவந்துநின்ற தரவொலிதழைத்ததெங்கும். (எச)

மற்றுளவீரதநான்கும் வந்துதந்நிலையினின்ற
கொற்றவன்முதலியோர்க டரிசித்தாரோகைகொண்டார்
பொற்றநாயகர்முன்னுனோர் பொங்குபல்லியங்களார்ப்ப
வுற்றதேர்நின்றிங்கோயிற் கெழுந்தருளினரொருங்கே. (எரு)

திடமிகமறுநாட்பௌவத் தினவுதயத்தானந்த
நடனவில்பவர்முன்னோரை நன்னகர்வலஞ்சூழ்வித்துத்
தடவெயிற்பரிதியுச்சி சார்தரத்தாவாமேன்மை
யடர்சிவதடத்துநீரத் திரதேவர்காட்டுவித்து. (எசா)

தாவருஞ்சிவதீர்த்தத்திற் சங்கற்பமோதிமூழ்கி
மாவருமார்த்தார்மார்பன் மகிழ்ந்தினிதிருந்தான்வானத்
தேவருமுனிவர்தாமுஞ் சித்தருமற்றுமுள்ள
யாவருமூழ்கிமூழ்கி யின்பத்துட்டிளைத்தார்மாதோ. (எஎ)

அன்றிரவலங்குசேமே லையமைமற்றுள்ளோரை
நன்றியனகர்சூழ்வித்து நலந்தலைசிறப்பப்போற்றித்
துன்றியவலிசாலேற்றுத் துவசமுமிறக்குவித்தான்
பொன்றிணிகழற்காற்சூர வாதித்தனெனும்பூபாலன். (எஅ)

மருவுமித்திருநாடன்னின் மறையவராதியோர்க்குப்
பொருவறுமன்னதானம் பூதானஞ்சொன்னதான
மொருவரும்பயக்கோதான மாதியவுதவாநிற்குந்
திருவுடையவர்கொள்பேறு தெரிந்துரைத்திடவல்லார்யார். ()

மன்னர்முன்யாருந்தத்தம் வளம்பதிபுகச்செலுத்தி
நன்னர்மாமதியந்தோறும் புரிவிழாநடத்துவித்துப்
பன்னருமன்பிற்காலந் தொறும்பணிந்தேத்திவந்தான்
கன்னலஞ்சிலைவேள்போற்றுங் கட்டழகுடையகாளை. (அ0)

கண்மணிநீறுபஞ்சாக் கரம்பொருளாகக்கொண்டு
விண்மணியனையநேரி வேந்தரசளிக்குநாளிற்
பண்மலிமறைமாறுய பரசமயங்கண்மாய்ந்து
தண்மலியுலகமுற்றுஞ் சைவமாய்ப்பொலிந்ததாலோ. (அக)

இரும்புகழ்ச்சூரபானு விங்ஙனமொழுகுநாளி
லரும்புபல்லாண்டின்மேலா லணிகிளருறந்தைமேய
கரும்புறழ்மொழியாள்பாகக் கடவுடன்னருளான்மிக்க
வரும்புகழ்குணஞ்சால்காந்தி மதியொருமைந்தனீன்றுள். (அஉ)

மனுநெறிதவறுமன்னன் மதலையைவச்சிரார்க்க
னெனுமொருநாமஞ்சாத்தி யின்புறவளர்க்குநாளிற்
புனையுமம்மதலைதக்க பருவம்வந்துறவும்பொற்ப
நினையுநூலுணர்ந்துசைவ நேசமுநிரம்பக்கொண்டான். (அங)

அனையவன்றிறன்மையோர்ந்தே யமைச்சராதியர்கள்சூழப்
புனைமணிமகுடஞ்சூட்டிப் போற்றுசெங்கோலுநல்கி
வினையறுத்துயாவரெண்ணி விளங்குதன்றேவியோடுந்
துனையவைவண்ணர்கோயிற் புகுந்தனனசூரபானு. (௮௪)

வளர்சிவதடத்துண்மூழ்கி மங்கலக்களிற்றைத்தாழ்ந்து
தளிரிடைப்பணைத்தோட்காந்தி மதியுமைதிருமுன்சார்ந்து
கிளரடிவணங்கியேத்தி யருள்பெற்றுக்கொண்டிவண்ட
ருளார்ந்துறுங்கடுக்கைமாலை யொருவர்முன்வந்துதாழ்ந்து. (௮௫)

ஐயனேநீறுபூசு மழகனேமழுமானேந்துங்
கையனேகாலற்காய்ந்த காலனேகன்னிபாக
மெய்யனேயுறந்தைமேய விமலனேபஞ்சவானச்
செய்யனேசெய்யதேவா தேவனேபோற்றிபோற்றி. (௮௬)

விடையனேகாமற்காய்ந்த விழியனேகங்கைதாங்குஞ்
சடையனேசமனுதைத்த தாளனேதரகினவனன்றே
லுடையனேயண்டமியாவு முடையநாயகனேசூலப்
படையனேபஞ்சவானப் பரமனேபோற்றிபோற்றி. (௮௭)

வாமமேகலையொண்காந்தி மதிமணவாளபோற்றி
தாமரைச்செங்கண்மாற்குஞ் சதுமுகத்தாற்குமெட்டாக்
காமர்சேவடியாய்போற்றி கயிலையங்கிரியாய்போற்றி
யேமமாருறந்தைமேய விறைவனேபோற்றிபோற்றி. (௮௮)

தெளிமனத்தொளியேபோற்றி சிவபுரத்தரசேபோற்றி
யளியனுக்கமுதேபோற்றி யாருயிர்க்குயிரேபோற்றி
களியுடைக்கனியேபோற்றி கற்பகத்தருவேபோற்றி
வெளிநடத்தவனேபோற்றி விலவவனேசபோற்றி. (௮௯)

என்றுநாத்தழும்பவேத்தி யிருகணீரருவிசோர
நின்றுமாகருணைவள்ள லிறையருள்பெற்றுமுன்னை
நன்றுசாலுருவம்வாய்ந்து நற்றுணைத்தேவியோடுங்
குன்றுதலில்லாவெள்ளிக் குன்றமுற்றமர்ந்தானென்றான். (௯௦)

என்றகாசிபன்மலர்த்தா ளேந்திழைமடவாள்போற்றி
மன்றலாரலங்கற்சூர வாதித்தமன்னனென்பா
னென்றமுன்னுருவம்பெற்றுக் கயிலையுற்றிருந்தானென்றாய்
நன்றவன்வரலாறைய நவிலெனமுனிவன்கூறும். (௯௧)

வேறு.

முன்னிமாலு மயனுமுழுமெயுந்
துன்னிநின்றகட் கோவுஞ்சுரர்களும்
பன்னிநாளும் பணிந்துபணிந்தெழ
மன்னிநிற்பது மாகயிலாயமே. (கூஉ)

மானுந்தண்ணமும் வைத்தகையாரன்றித்
தானுநீறு தரித்தெனத்தோன்றுமா
றேனும்வண்டுஞ் செறிவளத்தானுமபூக்
கோனுந்தாழ வுயர்ந்தவகைகுன்றமே. (கூங)

ஓங்குவானவ ரூரும்விமானமும்
வாங்குநான்மருப பும்பலும்வான்சிறை
தாங்குமோதி மமுந்தங்குவணமு
நீங்குறுத வடியதந்நீள்வரை. (கூச)

காலந்தோறுங் களைந்தெறிமாலைகள்
சாலமீது கிடப்பன தமபிரான்
போலத்தானும் புயங்கமபலபுனை
கோலமொப்பக் குலவுமமமால்வரை. (கூரு)

எங்குநாரண ரெங்கும்பிரமாக
ளெங்குமிந்திர ரெங்குமமராக
ளெங்குமாதவ ரெஙகுநல்விஞ்சைய
ரெஙகுஞ்சித்தர்க ளெண்ணிலக்குன்றத்தே. (கூசு)

விரைமலர்த்தலை வேதன்பதவியுங்
குரைகடற்றுயில கொண்டல்பதவியும்
புரைசெய்மற்றவும் போயொழிநாளினு
முரைசெயபபொலிந் தோங்குவதம்மலை, (கூஎ)

அந்தமால்வரை யாண்டகைகோயிலின்
சந்தவாயில் புரக்குந்தகைமையான்
சிந்தமாறு சினக்குந்திறலினன்
கந்தவார்குழற் கத்துருமங்கையே. (கூஅ)

ஒருதினத்தி னுவளகத்தம்மையோ
டருளினூட்டய ராண்டகையங்ஙனே
கருதுபொற்கடை காப்பவன்சோர்வினைத்
திருவுளத்திற் றெரிந்துகொண்டானரோ. (கூகூ)

என்றுரைததவற் போற்றியிககாதையை
நன்றுகேட்ப மகனயனககுரு
டொனறுமெனபிணி யாவுமொழிந்தன
சென்றுபோறறவு மெண்ணஞ்செயதேனெனருள். (கOஅ)

நலலதேகினோந தாயமடநங்கைநீ
வலலகினமக ஞேடுமமமாநக
ரலறீர வடைநதுபிரானருள
புலலவேதகி வருந்தலபுரிகென்றன. (கOகூ)

குலவுமன்பிறகாாக கோடகனெனபவ
னிலவுதாயொடு நீாவளநாட்டிறசீ
ருலவுமேனமை யுறநதையுறறனென்றன
பலவுமோாநத பளகறுசூதனே. (ககO)

திருவிழாப்படல முறறிறறு.
ஆகததிருவிருத்தம - ககஉ௫

## கார்க்கோடகன் பூசைப்படலம்.

ஆடகனறட மாாபுபிளநதவோ ரணணலசூழ
மாடகன்பொழில சூழுறையூரமா வளளலை
யேடகன்ற கருஙகுழறறுயொடு மெயதுகாாக
கோடகன்புரி பூசைநலஞ்சில கூறுவாம. (க)

குலவுதாயொ டுறநதையடைநதகாாக கோடக
னிலவுகோயிற சிகரிமுனறுமுறநது நெரோலென
வுலவுபோசசிவ தீாததமடைநதவ ஞேஙகுசீா
பலவுநோககினன சங்கறபமோதிப படிநதனன. (உ)

தாவரும்புகழ்ந்த தெயவவெணணீறு தரிததனன்
றாவருநதவக கணமணிமாலிகை சூடினன்
யாவருஙகரு தைநதெழுததுளள மழுததினன
ளேவரும்பரன கோயிலுளாயொடு முறறனன. (௩)

பாயசீாவிடை முன்னரணைநது பணிநதனன
றூயபொனசெய் விமானததைமுமமுறை சூழ்நதன
ளையகன்பினா நிற்குநறுநதுணா விலவத்தை
நேயமாரக்கண் டானதைபபூசிக்க நோநதனன். (௪)

வேறு

திருவளர்கூவிளபூசா விதியுரைபயாஞ்சங்கற்பஞ் செய்துகொண்டு, பெருகுறவெண்டிக்கினுமா னெய்யினிதுண்டெழுவிளக்கம் பிறங்கவைத்து, மருவுபுனலாட்டியுடை புனைந்துசாந்தணிந்துமலர் மாலைசூட்டிப, பொருவறுநற்றூபமொடு பலவகைத்தீபமுமன்பு பொலியக்கோட்டி. (ரு)

தூயபாலன்னமுதற் பலவகையசுவையுணவு துலங்கவூட்டி
நேயமாராசமன முதலியநல்லுபசார நிரமபசெய்து
பாயவருச்சனைசெயவக் கூவிளத்தின் றிருநாமம் பலவற்றுள்ளு
மேயமிகுசிறப்புற்று விளங்குதிருநாமங்க ளெண்ணவேண்டும். (சு)

அப்பெயரபன்னிரண்டுவிதி முனியனுட்டுபபுச்சந்த மாகுந்தேவன்
மைப்படிகந்தரன்பரா பரைசத்திகீலகமும் வாமதேவன்
செப்புநலமருளிரு முதலோராறுமங்கஞ் ரோங்கியாசந்
தப்பில்கிருதத்திரமும் முறைபுரிகதியானவகை சாற்றக்கேண்மின்.

தகுமிறீம்பீசபுரு டார்த்தசித்திசிவபபிரியங் தானுய்வைகி, மிகு மலரின்வகையனைத்து மாய்சுகந்தந்திடுதீப வொளியாய்மேனாட், சகநவிலுங்கோமயத்தி லுற்பவமாய்த்தருமேன்மை தாமாய்நாமாய், நகமெனும்வில்வத்தையுனிற் சிற்பரானந்தமரு ளுதனுமால. (அ)

வில்வவிருக்கேசசீ மானிறீம்பீசகோ மயத்தின்மேவுஞ்
செலவசங்கரானந்த சுத்தபதுமபபிரிய திகழ்வியாத
மல்வளர்புட்பாதிககேத் திரக்கியாதியமாராபணி வரதாபீட்டஞ்
சொல்வகையீராறுபெயா கூவிளத்தினுமமெனத் துதிக்கவேண்டும்.

ஈராறிப்பெயர்தினமுக் காலமுநற்சுசிமருவி யிசைக்கினன்கு
சீராரும்பூமகளு நாமகளுஞ்சோவர்பிணி சேராதென்று
நீராருஞ்சடிலனுரு வேவுநந்திமுதற்றேவா நேயமுண்டாம்
பாராளுந்திறமருவும் பரைபரனீங்காதமரும பண்புங்கூடும். (க0)

அலகைமிருகாதியரு கணுகாதுவினைவினரு மறைந்துளோருங் குலவுறுமிபபயனடைவர் மந்தணமீதிந்நாமங் கொண்டர்ச்சிபபோர் நிலவுறவெண்ணியவெல்லா மடைவரொனுமரன்றிருவாய் நிறைசொலோர்மின், குலவுறுமிவ்விதிபபடியே பூசித்தன்புறுமனக்கார்க் கோடகன்றான். (கக)

வணங்கிமனமகிழ்ந்தேத்தி யஞ்சலிசெய்நியமமுடன் வலஞ்சூ
ழ்போந்து, கணங்குலவுமங்கலகுஞ் சரத்திருதாண்மனங்கொண்டு
கனிந்தர்ச்சித்து, மணநகமழ்மோதகமாதி பல்லுணவுநிவேதித்துவா
ழ்த்திப்போற்றிப், பணநகொளரவணிபஞ்ச வர்ணேசன்றிருமுன்ன
ரப் பரிவின்வந்து. (கஉ)

மவுனவிரதம்பூண்டு விதிமுறையேபலமலரு மலியச்சாத்தி
யுவமையகல்பாத்தியமா சமனமருக்கியமாதி யுதவியெண்ணெய்
நவையகனென்மாநெல்லி நறுமஞ்சள்கௌவியநல் லமுதமைந்து
தவறுமுழிபாறயிரநெய்தேன் கழைபலஞ்சந்தனந்தாரை சங்கங்கும்பம்

இம்முறைகொண்டாட்டியிடை யிடையிற்சுத்தோதகமு மினி
திருட்டி, விமமுமணநகமழாடை தரித்துநறுஞ்சந்தனமும் விளங்
கச்சாத்தி, யம்முருகுமலர்மாலை சூட்டிநிவேதித்தினிய வன்னமாதி,
மும்முனைவேலுடையபிராற் கருக்கியமாதியமுகமன் முன்போனல்கி

தீபவகைமுறைகோட்டி யேனையுபசாரமுற்றுஞ் சிறபபச்செய்
து, மாபரனேயுமையொருபால் வள்ளலேயடியேற்கு மருவென்று
ய்க்குந், தாபவகைதருங்கொடுநோ யொழியுமவகைபொழிகருணைத்
தாணுவேநன், னீபமணிகுகற்றந்த நின்மலாவருடியென நெடிது
போற்றி. (கரு)

காந்திமதியம்மையையு மவ்வாறேமாபூசை கனிவிற்செயதா,
னேந்தியபேரெழிலன்னுய் வினதையெனுமொருமுன்றுய்க் கிழைத்
ததீங்கு, மாய்ந்தொழியக்கருணைபொழிந் தனையாலென்றடிபணிந்து
மாறுவன்பி, ஞய்ந்தமலராதிகொடு நந்திமுதற்றண்டியந்த மருச்சி
த்தானே. (கசு)

இந்தவகைமீனமதி சுக்கிலபக்கந்தொடங்கி யிலகுநீரோ
டந்திமதிபுனைவானை யருச்சித்தைமூனறுதின மாம்பௌவத்திற்
சுந்தரமண்டபஙகோயி றிருமுன் றில்பிரகாரஞ் சூழபபூவாற்
பந்தரினிதமைத்துநறு நெய்விளக்கம்பூரணகும பங்கள்வைத்து. ()

ஆதியாலயநடுவி லலங்காரமண்டபத்தி னேயரம்மை
தீதில்பமுகன்குகன்றண் டீசர்தமையெழுந்தருளச் செய்துநாறுன்
கோதில்குடப்பாலாதி முன்போலவபிடேகங் குலவுச்செய்து [ன்
சோதிவளர்நாகமணி யயுதங்கொண்டாட்டினன்கத் துருமின்மைந்த

சந்தநறுமலர்மாலை பொற்றுகில்வில்லரதநப்பூண் டயங்கக்கொண்டாங், கந்தவழவைவரையு மலங்கரித்துத்தயிரன்ன மாதிநல்கி, மூன்றுசுடர்கோட்டிவிமா னங்கண்மிசையெம்பெருமான் முதன்மற்றோருமே, வந்தணையுமபடியியற்றி மறைமொழிபலவியங்கடன மல்கியோங்க. (௧௯)

பெருந்தகையசுட *ரயுதம் பிறங்குமுடி மன்னவர்கள் பெட்பின்மொய்ப்பப், கருங்கடலிற்கிளர்ந்தடியா ரளிதந்தேத்தவானவர்கற் பகப்பூச்சிந்தத், திருந்துகயன்மதியினிறை மதியிரவினுறந்தைவலஞ்செய்வித்தன்பா, யிருந்தவர்கள்கொண்டாட • விசாதிருநாளினிறைவேற்றினனே. (௨௦)

கறைமருவுகந்தரத்தெம மைவண்ணபெருமானுங களபக்கொங்கைப, பொறைமருவுபராபரையு மறமறையருமாலயத்துட் பொலியப்புக்கு, நிறைமருவுமரியணைமே லிருபாலுகண்டானந்த நிரம்புநேயத், துறைமருவுதாயொடுகார்க் கோடகன்முன்பணிந்தெழுந்து துதிக்கலுற்றான். (௨௧)

வேறு.

மூவாமுதலே முடிவிலாபெம்மானே
பூவார்கணையாற் பொடிசெய்தபுண்ணியனே
கோவாமணியே குணாகடனஞ்சுண்டானே
தேவாதிதேவாநின செங்கமலத்தாள்போற்றி. (௨௨)

நஞ்சடைந்தகண்டா நலமடைந்தாருள்ளொளியே
யஞ்சடைந்தவண்ணா வருளடைந்தமேனியனே
தஞ்சடைந்தாயேற் கருளுந்தனிமுதலே
பஞ்சடைந்தசிறடியாள் பாகாநின்றாள்போற்றி. (௨௩)

விடையாய்வெண்ணீற்றாய் விளங்குநெடுஞ்சூலப்
படையாய்கயிலைப பருப்பதத்தில்வாழ்வாய்
கடையாயுழல்வேன் கரிசறுத்தாய்கொன்றைச்
சடையாயுடையாய்நின் றாமரைபபொற்றாள்போற்றி. (௨௪)

தாமரைமேல்வாழ்வான் படைக்கநறுந்தண்டுழாய்க்
காமர்நெடுமாயோன் காக்கபெறுவுருவோய்
மாமருவும்வில்வ வனமருவுமபெம்மானே
பாமருவுசீர்த்திப பரமாநின்றாள்போற்றி. (௨௫)

* அயுதம் - பதினாயிரம்.

வேறு.

என்றுளமுருகித் துதியுரைத்தன்பி லிணையில்கார்க் கோடகனி ற்ப, நன்றுகத்துருவும் பற்பலதுதித்து நாயகன்றிருமுனர் நின்று, என்றுசிருறந்தை மேயவெமபெருமா னவர்க்கெதிர்தோன்றின னு ரைப்பான், குன்றுதலில்லா வன்பினீரியற்றுங் குறிகொள்பூ சனைக் குளமகிழ்ந்தேம். (உசு)

மீனமாமதியித் தினத்திலிவ்வாறிவ்விழாச்சிறபபெமக்கியற் றிடுவோ ருனமில்செல்வ ராகிவாழ்ந்தீற்றி லுறுவாரமபதவியி துண்மை மானமிலரவ முன்புபூசித்த வண்மையிறுனுமித் தினத்தி னைபூசனையி றுனுநாகேச னெனும்பெயரணிந்தனம் யாமே. (உஎ)

இத்திருநாட்கு மரதநத்திருநாளென்றுபேரோங்குக புவியி, ல த்திருவினைதைக் கிழைத்ததீங்கானீ ரடைந்த*கொத்தையுங்கொடும் பிணியு, நத்திருமுனிவ னமபெருங்காதை நவின்றிடக்கேட்டபுண் ணியத்தா, லத்திருநாளே போக்கினங்கதியு மளிக்குதுமீற்றிரு வோ ர்க்கும. (உஅ)

என்றுதன்றிருவாய் மலர்ந்தனன்மறைந்தா னெங்கணுயகனவ ணின்ற, குன்றுநோகொங்கைக் கத்துருமாதுங் குலவுகார்க்கோடக னுஞ்சி, ரொன்றுமக்கோயி றனைவலங்கொண்டா ரொபபிலான்றிருவ டி பணிந்து, நன்றுசால்காந்தி மதியுமைபதமு நலமுறப்பணிந்தனர் பின்னர். (உகூ)

புறவிடைகொண்டு காசிபமுனிபாற் போயினாமற்றவன் வினவ வறவிடைப்பாக னுறந்தையையடைந்தாங் கருச்சனைபுரிந்ததுமன்பா லுறவிடையீடி லின்பமுற்றதுவு முரைத்தினிதிருந்தன ரென்று னறவிடையருது பொழிமலர்மலிந்த நைமிசத்தவர்க்குயர் சூதன்.

கார்க்கோடகன் பூசைப்படல முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ககடுடு

---

## உதங்கமுனிபூசைப்படலம்.

காமம்வெகுளி மயக்கமெனுங் களைகட்டருணன் னீர்பாய்ச்சி யேமவுளச்செய் யிடைச்சைவ பத்தியென்னும் பயிர்வளர்க்கு நாமவுதங்க முனியென்பா னலஞ்சாலுறந்தை வளர்கொன்றைத் தாமமுதலைப்பூசித்த தன்மைசிறிது சாற்றுவாம். (க)

* கொத்தை - குருடு.

இறைவனோராயிரவருட னெல்லைகழியவின்பமா
யுறையுமுத்தியருளுவலென் றுரைத்தவாய்மைகடைப்பிடித்துக்
குறைவில்காலமோரைந்துங் குளிர்நீராட்டிமலர்சூடி
நிறையின்சுவையோதனமூட்டி நிலவுமன்பிற்பூசிப்பான். (௨)

வரிமென்மலராலிலைதளிரால் வளர்சந்தனத்தாற்றண்டுலத்தாற்
புரிமுந்நூலான்மஞ்சரியாற் புகறூபத்தாற்றீபத்தாற்
* சருவாற்றுகிலாற்பாதத்தியவா சமனவருக்கியத்தானன்
கொருவாமனுப்பூவாற்குறைபா டொழியப்பூசித்தொழுகுநாள்.

செறிமென்மலர்ப்பைங்கூவிளத்தைச் சிவபாவனைசெய்தருச்சித்
தறியகொன்றைச்சடைமுதலை நகுமாமறைமத்தகந்துஞ்சுங் [து
குறிகொடுதிகழுணைத்திறைஞ்சிக் குலவியொழுகுமுதங்கமுனி
யறிவினாடியொருதிருநா ளமலற்கியற்றத்தொடங்கினான். (௪)

மேடமதியின்வளர்மதியம் விளங்கேழாந்திதிநாளி
னாடலுவந்தாரம்பொற்றேர் நடந்தவாறுந்திதிநாளி
னீடுகொடியாரோகணஞ்செய் நார்திநிதமைவருமிவர்ந்து
தேடுமறையாதிகண்முழங்கத் திருமாநகர்சூழ்தரப்புரிந்து. (௫)

ஒன்பானாள்வைகறையினனே ரொளிர்பொற்றேரோரைந்தினுந
கன்பாலைவரையுமேற்றி யலங்காரங்கள்பலமொய்ப்ப [ன்
முன்பாருளர்விண்ணுளர்வணங்க முடியாமகிழ்வினடத்தியபி
னன்பாலருள்வைப்பவன்முதலைவரும்பொற்கோயிலுறவியற்றி

பத்தாநாளாம்பௌவத்திற் பரமன்முதலைவருநறிய
கொத்தார்மலர்விமானமோரைந்தியற்றியதன்மேற்கூடச்செய்[ச்
சித்தாரணியோர்கொண்டாட வுறந்தைவலஞ்செய்வித்திறைஞ்சி
சித்தாதியருமாடுஞ் சிவதீர்த்தந்தோய்ந்துவந்தனனே. (௭)

மறையோர்திருநாள்சேவிக்க வந்தமறையோர்முதல்யார்க்குங்
குறையாமூரலுடையாதி கொடுத்துவருடந்தொறுமிவ்வா
றறையாடுறுசுக்கிலபக்கத் திருநாடவறுதாற்றினான்
பொறையார்மேன்மைத்தவமுள்ளார்புந்திநினைவெய்திடலரிதோ

பரமன்கோயின்மறையவரிற் பத்தர்மடங்கள்பூவனங்கள்
கரவிலீசற்குபகரணங் காட்டுந்தருக்கள்விளைநிலங்க
டருநீர்ப்பந்தரனச்சாலை தரணிபுகழுமண்டபங்கண்
மருவுமிவைமுற்றிருப்பணிக ளனைத்துமியற்றிமகிழ்ந்தனனால். ()

* சரு - சோறு.

கல்லுங்கரையவுள்ளுருகிக் கண்ணீரருவிமழைபொழிய
வல்லும்பகலுமிடையரு வன்பிற்பொலிவுற்றம்மானைச்
சொல்லும்பொருளுமானானைத் துதிசெய்திவ்வாறொழுகினு
னெல்லும்வருடமாயிரமுங் கழிந்ததப்பாலுறுமொருநாள். (கo)

வேறு.

சிவதடப்புனலுண்மூழ்கித் தெய்வவெண்ணீறுபூசி
யவமறுகரநியாச மங்கநியாசஞ்செய்தே
யுவமையிலுருத்திராக்க வொண்மணிமாலைபூண்டு
நவவடிவுடையநாத னயக்குமைந்தெழுத்துமெண்ணி. (கக)

மல்லிகைமுல்லையார்செவ் வந்திமந்தாரம்புன்னை
யல்லியங்கமலநீல மரகதிதழ்க்கழுநீர்கோங்கு
வில்லியல்சண்பகம்பா டலங்கரவீரங்கொன்றை
சொல்லியவிவைமுன்னான தூமலர்பலவுங்கொய்து. (கஉ)

மஞ்சனஞ்சாந்தமுன்னா வருத்திடுபலவுஞ்சேர்த்துப்
பஞ்சவர்னேசப்பெம்மான் பரவுறுதிருமுன்மாப்பே
ரொஞ்சலின்மண்டபத்தாங் கிருவகைநியாசமாற்றிச்
செஞ்சுடர்ப்பரிதிபூசை செய்முறைபபடியேசெய்து. (கங)

மறைமுதலுள்ளத்துள்ளி யருக்கியம்வைத்துமாடோர்
பிறைமருப்பிறையைப்போறறிப பெருங்கடத்தறஞ்சால்கங்கை
நிறைதரவாவாகித்து நேயமார்சுத்திசெய்து
குறைவிலகௌவியமுங்கூட்டிக் கோதறுதபனம்வைத்து. (கச)

தேசமர்பூதசுத்தி யந்தரியாகஞ்செய்தாங்
காசனமூர்த்திமூல மாச்சிவரூபம்பாவித்
தேசறுமங்கலபபே ரியானையையிறைஞ்சிவேண்டி
மாசறுதென்றுவார வழிமனமகிழ்ந்துசெனறு. (கரு)

உரைதருசீர்சால்வீம வுருத்திரன்பூசையாற்றித்
தரைபுகழ்தண்டிமுண்டி யாதியர்தம்மைப்போற்றிப்
புரையிலெம்பெருமான்முன்பு போந்துசங்கிதைவிசேடக
கரையருக்கியம்பூரித்துக் கங்கைதன்பூசையாற்றி. (கசு)

மன்னியபுகழ்சால்பஞ்சா வரணவான்வரைப்போற்றி
புன்னியாவாகனந்தா பனமுயர்சந்நிதானஞ்
சந்நிரோதனமுஞ்செய்து தாவில்பாத்தியமுன்னீந்து
துன்னியதூபதீப நிவேதனந்துலங்கச்செய்து. (கஎ)

பாயமாமறைநற்பாசு பதாத்திரத்தபிடேகஞ்செய்
தாயமாலியங்கணீக்கி யாய்மணத்தயிலமிக்க
தூயகௌவியமாநெல்லி திரவியஞ்சுவைத்தேன்கன்ன
னேயநல்லயிர்பாறேய்ந்த தயிர்நிறையமிர்தமைந்து. (௧௮)

தெங்கிளநீர்நெய்சந்தஞ் செப்பிவையொவ்வொன்றாகத்
தங்கிடையிடைபூச்சாத்தித் தன்கையான்முறைகொண்டாட்டி
யங்கியல்கருப்பூரத்தீ பஞ்செய்தாய்கனிநிவேதித்
திங்கிதமுனிவன்சுத்தோ தகமெடுத்தாட்டினானே. (௧௯)

குறைவறுமூலமோதித் தபனமங்கையிற்கொண்டாட்டி
நிறைபதநவின்றுகாண்டா மிருகத்தினெடியகோட்டா
லறைசெய்சீயுருத்திரஞ்சொற் றுயிரந்தாரையாலு
மறைமுதலுரியகாயத் திரிசொலிவண்சங்காலும். (௨௦)

அலங்கவாட்டுபுவிசேட வருக்கியப்புனலுமாட்டி
நலங்கொளொற்றுடையிட்டு நகைசெய்பொன்னுடைசாத்தித்
துலங்குநன்னீறுசந்தந் தூர்வையக்கதைமாலூர
மிலங்குபன்மாலைபொற்பூ ணியைதரவினிதுசாத்தி. (௨௧)

தருமலர்நிறையக்கொண்டு தத்துவத்தினையஞ்சாத்தி
யொருவில்சீர்த்தண்டபங்கி முண்டபங்கியுமுனுற்றி
மருவிலயாங்கம்போகாங் கமுமுறமதித்தர்ச்சித்துப்
பெருவினைத்தூபதீபம் பிறங்குறக்கோட்டிமாதோ. (௨௨)

இனியபாலனநிவேதித் தருக்கியமினையநல்கி
முனிவறவடுக்குதீப முதலியபலவுங்கோட்டிப்
புனிதவெண்குடைமுன்னாகப் புகலுபசாரஞ்செய்து
நனிமனத்தன்புபொங்கப் பாத்தியமாதிநல்கி. (௨௩)

அவமகல்வில்வங்கொண்டு சிவாயமுற்கூறியர்ச்சித்
துவமையில்பளிததீப மொளிபெறக்கோட்டிப்போற்றித்
தவலரும்பலத்தைமுக்கட் டம்பிரான்கையினல்கிச்
சிவபரன்முன்னர்நின்று தோத்திரஞ்செய்யலுற்றான். (௨௪)

அன்புசாலடியருள்ளத் தவிரொளிப்பிழம்பேபோற்றி
யென்[illegible]னெக்குருகநாயேற் கின்னருள்புரிந்தாய்போற்றி
நன்புகழுறந்தைமேய நாயகப்பிரானேபோற்றி
புன்புலால்யாக்கைவேண்டேன் பூரணபுராணபோற்றி. (௨௫)

இருவினையொப்புவாய்ப்பி லிரும்பவக்கோடைமாயப்
பெருகருட்டெய்வமாரி பெய்யுமாமுகிலேபோற்றி
மருவுபேரினபமேயாய் மன்னியவள்ளல்போற்றி
யருவருப்புடையயாக்கை யாற்றிலேனமலபோற்றி. (உசு)

கலவுமும்மலமற்றுருட் கதிக்குமெய்க்கருணைபோற்றி
குலவுவெள்விடைமேற்காட்சி கொடுத்தருள்கோலம்போற்றி
நிலவுமம்பலத்துளாடு நின்மலக்கொழுந்துபோற்றி
புலவுநாறிழிந்தயாக்கை புககிரேன்புராணபோற்றி. (உஎ)

மணமலிகூநதற்காந்தி மதிமணவாளபோற்றி
பணமலியரவம்பூண்ட பஞ்சவர்ணேசபோறறி
குணமலியுறந்தைமேய குணப்பெருங்குன்றேபோற்றி
நிணமலிமுடைக்குப்பாய நேசியேனிமலபோற்றி (உஅ)

ஒன்றுறுகுறிப்புமேவ வுதங்கமாமுனிவனென்பா
னன்றுறித்துதிசெய்பாலே நகைபருள்வழங்கியெம்மான்
வென்றுறுமொளியாய்த்தோன்ற மேவிமற்றதின்மூழ்குற்று
ளன்றுறுகளியின்மூழ்கி யலர்மழைபொழிந்தார்வானோர். (உகூ)

உறுவிறன்முத்திசார்ந்த வுதங்கமாமுனிமாணுக்கர்
மறுவறுமுனிவர்மற்றோ ராவயின்வதிந்துபோற்றித்
தெறுமலபந்தஞ்சிந்திச சிவகதியடைந்தாரொன்றான்
குறும்திமுடித்தவேணிக் குழகனுக்கினியசூதன். (௩௰)

உதங்கமுனி பூசைப்படல முற்றிற்று.

ஆகததிருவிருததம் - ககஅ௫

## வேடன் முத்தியடைந்தபடலம்.

புத்திவெங்கொலே யாதியிற்புகுத்துமோர் புளிஞன
பத்திநீள்வலேப் படுபவனுறந்தைவாழ் பரம
னத்தியீருரி போர்த்தவன்றிருவரு ளடைந்து
முத்தியெய்திய காதையையறிந்தவா மொழிவாம். (க)

நறுமலர்த்தட நாகிளங்கவரிகள் பாய
வுறுவிறற்றகட் டகட்டிளவாளையாங் கொருவிக்
கறுவின்மாமழை கிழிதரப்பாய்தருங் கணிசூழ்
மறுவிலாதவான் மீகமென்றொருவளத் தேயம். (உ)

மருவுமப்பெருந் தேயத்தின்மறையவர் குலத்தி
லொருவில்பாதகம் யாவுமோருருக்கொண்ட தென்ன
வெருவயாவருந் தோன்றினனவன்பெயர் வினவிற்
கருமசன்மன்மற் றவன்கொடுந்தொழிலையார் கணிப்பார். (ங)

தீயவாகிய வெண்ணமேயெண்ணுசிந் தையினன்
றீயவாகிய சொற்களேசெப்பிடுந் தீயோன்
றீயவாகிய தொழில்களேநாடொறுஞ் செய்வோன்
றீயவாகிய வெவற்றிற்குமுறையுளாய்த் திகழ்வான். (ச)

சந்திவந்தனை மறந்தனன்றக்கமா மறைநூல்
புந்தியோவுற விட்டனன்புண்ணிய மெனுஞ்சொ
லந்தியும்பக லுஞ்செவியுறுவகை யடர்ப்பான்
முந்திமாதர்தம் போகமேயின்பென முயல்வான். (ரு)

குலமறந்தனன் கோத்திரமறந்தனன் குடிமை
நலமறந்தனன் செபிப்பதுமறந்தன னன்னூல
பலமறந்தன னீறணிந்துமாபரற் பணியும்
வலமறந்தனன் மாதரின்பொன்றுமே மறவான். (சு)

கூடுவான்பிறர் கைப்பொருள்கவருவார் குழுவை
நாடுவானெவா தனிவழிநடப்பவ ரொன்று
வாடுவான்பிறர் மனைமுயக்கெண்ணிமங் கையர்பா
லோடுவானுல காயதப்பேய்ப்பிடித் துழல்வான். (எ)

திருகுசிந்தையா னருளெனல்கனவினுந் தேரான்
குருகுமுன்கையார் குவிமுலைக்கேமனங் குழைவான்
பெருகுதீவினை யாளனுய்ச்சிவநிந்தை பேசற்
கருகர்புத்தர்வை ணவரினுஞ்சிறந்தவ னுறைன். (அ)

அனையனோர்தின மணிமுலைப்பரத்தையை யவாவிப்
புனையுமெம்பிரான் கோயிலுட்புக்கன னகத்
தனையொவ்வாதவற் போற்றவந்தானெனத் தன்னு
ணினையுஞ்சாதுவா மருச்சகனொருவனே ரணைந்து. (கூ)

பாங்குமேவுவெண் ணீற்றினைக்கொள்கெனப் பணித்தான்
றேங்குதீவினை யாளனுஞ்செழுநிதி யெனக்கைத்
தாங்கினின்றனை யானிந்தமடைப்பள்ளிச் சாம்பல்
வாங்கவோவிங்கு வந்தனன்போவென மறுத்தான். (கய)

